சென்னைப் பதிவு எண் கரு0கூ

இதன் விலை அணு ஒன்றரை.

தந்தி விலாசம்:—"OOLIAN"

# ஊழியன்

சந்தா விபரம்.

| | | |
|---|---|---|
| வருடச் சந்தா | ... | இ—0—0 |
| ஆறுமாதச் சந்தா | ... | க—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | | ச—0—0 |

செவ்வாய்தோறும் நிகழ்வது.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

விளம்பர விகிதம்.
அங்குலம் க-க்கு வாரம் க-க்கு 0—அ—0
நீடிமன்ற விளம்பரம் அங். க-க்கு க—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியகர்த்தருக்கு எழுதவும்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான் பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் அ. காரைக்குடி. பிரபவ-ஆு கார்த்திகைமீ உகவ (கூ—கஉ—உஎ) இதழ் கக

அதிகமாக வார்த்தையாடாதே. ஒளியை யளிப்பது வார்த்தைகளல்ல; மனோஹரமான பாஷையுமல்ல; நம்முடைய குணமே, இயற்கையே, அதையளிக்கும். தீர்க்கதரிசிகளான மஹான்கள் மிக லகுவான பாஷையிலேயே பேசினார்கள். ஆனால் அவர் சொற்களில் ஒளி, உயிர், நம்பிக்கை, தைரியம் யாவும் ததும்பி நின்றன. பக்தி என்னும் செடி உன் ஹிருதயத்தினுள் மௌனமாக வளரட்டும். வாஸ்தவ பக்தியினுடைய ஆனந்த பாஷ்பத்தினால் அதற்குத் தண்ணீர் வார். பலன்களை எதிர்பாராதே. பூர்ண ஹிருதயத்துடன் சேவைமட்டும் செய்துகொண்டிரு. உண்மைப் பக்தன் தன் உயர்ந்த லக்ஷியத்திற்கேயன்றி, வேறெவர் பொருட்டும் உழைப்பதில்லை.

* * *

எல்லா விஷயங்களும் சரியாக இருக்கும்பொழுது, எவனும் சந்தோஷமாக இருக்கக்கூடும்; ஆனால் எல்லா விஷயங்களும் தவறுதலாகவும் தமக்கு விரோதமாகவும் ஆகும் சமயத்தில்கூட, யார் கலக்கப்படாமல் நிற்கின்றனரோ அவரே நிஜ பக்தர்கள். பரிசுத்தத்திலும் நம்பிக்கையிலும் நழுவாது நில்; உனக்கு நிச்சயமாக பலம் தோன்றும்; உன் வழி தெளிவாகத் தோன்றும்.

* * *

நம்முடைய லக்ஷியத்தை யடையும் வழியில், எதையும் எதிர்த்து நிற்கத் தைரியம் வேண்டும். 'எனது குருநாதர்' என்ற பிரசங்கத்தில் ஸ்வாமி விவேகாநந்தர் கூறுவதைக் கவனி: "உலகம் பூராவும் உன்னை யமுக்கிவிட முற்பட்டாலும் நீ உன் லக்ஷியத்தினின்றும் நழுவாது வேலை செய்வாய் என்று உண்மையாக நம்புகிறாயா?" அவ்வகையான உறுதியும் ஆத்மத்தியாக புத்தியும் அவசியம். மனோபலஹீனத்தைக் கொண்ட மாந்தரால் உண்மையை அடைந்து அனுபவிக்க முடியாது. நம்முடைய வாழ்க்கையின் காரியத்தைத் தைரியமாக நிறைவேற்ற வேண்டும். எவருக்கும் அஞ்சாதே. தெய்விகமும் பரிசுத்தமும் உனது பிறப்புரிமைகளாகும். நம்பிக்கையுடன் போராடி முன்செல்.

* * *

தன்னலங்கருதாதவன் ஏன் அஞ்சவேண்டும்? சுயநல அபிமானமே எல்லாத் துக்கத்திற்கும் பயத்திற்கும் காரணமாகும். தன்னலமற்றவனுக்குப் பாவம் எதுவுமில்லை. இதை யறிந்து பயத்தையும் கவலையையும் ஒழித்துச் சுதந்திரனாக இரு. மதம் உபதேசிப்பது பயமின்மையேயாகும். வாக்கிலும் செய்கையிலும் பரிசுத்தமானவனே பயமற்றிருப்பான். முன்காலம் சென்றுவிட்டது, மறைந்துவிட்டது; ஆனால் நிகழ்காலம் உயிருடன் இருக்கிறது. ஆதலின் இப்பொழுது எதையும் தன்னலங்கருதாமல் செய்வாயாக.

## மலர்மணம்.

### பக்திமார்க்கம்.

(பரமானந்த சுவாமிகள்.)

"தன்னிடந்தானே நம்பிக்கை கொள்ளாதவன் ஒரு நாஸ்திகனுவான்" என்கிறார் ஸ்வாமி விவேகாநந்தர். முதலில் உன்னிடம் உனக்கு நம்பிக்கையில்லாவிடின் உனக்குப் பகவானிடமும் நம்பிக்கை யிருக்காது என அறி. நம் நாதன் நம்மை என்ன செய்ய விரும்புகிறான் என்பதை நாம் அறிந்துகொள்ளாமலிருக்கலாம். ஆனால் அவனுடைய குழந்தைகளாகிய நம்மைக் காப்பாற்றி வழி காட்டுவான் என்பதை நிச்சயமாக நம்பலாம். நமக்கு வேண்டியது அவ்வளவே. உலகம் அனைத்தும் நமக்கெதிராக நிற்கட்டும்; நாம் அதைக் கவனிக்கக்கூடாது. நாம் தைரியமுள்ள சேனைவீரராக, உண்மையான நம்பத்தக்க வீரராக இருக்கவேண்டும்.

* * *

உனக்குள்ளே யன்றி வேறெங்கும் சாந்தி ஏற்படாதென்பதை யறி. நாமே சாந்தியைப் பெற்றாலன்றி எவ்விடத்திலும் நமக்குச் சாந்தி ஏற்படாது. ஆகவே அந்தச் சாந்தியை உன்னுள்ளே பெறுவதற்கு முயற்சி செய்; அப்பொழுது நீ முத்தனாய்விடுவாய்; உன் அமைதியை வெளிக்ஷேபம் ஏதுவும் அழிக்கமுடியாது. பயப்படாதே. உன்னுள்ளேயே நம்பிக்கை கொள். எப்பொழுதும் முன்னால் நடந்துசெல்! உண்மைக்காகப் போராடித் தீரபுருஷனை யொத்து மரணமடைவாயாக. இது உன் ஆத்மாவிற்குச் சாந்தியையளிக்கும்.

* * *

திடபுத்தியுடனும், தூய்மையான லக்ஷியத்துடனும் பயமின்றி நீன்றால், உன்னை எவரும் உன் பாதையினின்றும் அகற்ற முடியாது. சில மனிதர் அதைக்கெடுதலெனக் கூறுவதாலும், நமக்கு விரோதமாக எதிர்ப்பதாலும் நமது தூய்மையான லக்ஷியத்தினின்றும் நாம் ஏன் நழுவவேண்டும்? கூடாது! அங்ஙனம் செய்யவே கூடாது. உலகமனைத்தும் நமக்கு விரோதமாக இருந்தாலும், நாம் அசையாது நின்று நம் லக்ஷியத்திற்கு உழைக்கவேண்டும். இதற்குப் பலமும், தீர்மான புத்தியும் நம்மிடம் வேண்டும். யாவும் கரடு முரடின்றி ஒழுங்காகச் செல்லும் சமயத்தில் எவரும் தீரபுருஷனாக இருக்கலாம். ஆனால் உலக முழுவதும் தனக்கு விரோதமாகச் செல்லும் காலத்திலும் தன் நிலையில் உறுதியுடன் நிற்பவனே உண்மையான தீரபுருஷன். இது வாழ்க்கையின் சோதனையாகும்.

* * *

தைரியங்கொண்டு அபாரமான பொறுமையைப் பெற்றிரு. பொறுமை எதையும் வெற்றிகொண்டுவிடும். அபூர்வமான திட்புத்தியுடன் தைரியமாக, 'நான் உண்மையான வாழ்க்கையை வாழவேண்டும்' என்று சொல். உனது பலத்தைக் காண்பித்து உலகத்தை நோக்கிப் பயமின்றி, 'சர்வம் பிடித்த உலகமே, தூரச்செல். நீ எனக்குத் தேவையில்லை. உனது உதவியை நான் விரும்பவில்லை' என்று கூவு. உனது பலமனைத்தையும் ஒருங்கு சேர்த்துக்கொண்டு, திரும்பத் திரும்ப 'நான் பலவான், நான் தூய்மையானவன், நான் ஸத்யமானவன்' என்று உச்சரி,

* * *

பயம்! யாரிடம் பயமடைய வேண்டும்? நாம் பயமடைவதற்கு என்ன இருக்கிறது? நம்முடைய விரோதிக்கு நம் முதுகையா காட்டப்போகிறோம்? கூடாது. ஒருபொழுதும் கூடாது. துன்ப வாழ்வு வாழ்வதைவிட யுத்தகளத்தில் உத்தம வீரர்களாக மடிவோம். ஞானமென்னும் கத்தியையும், தூய்மையென்னும் கவசத்தையும் பெற்றவனே தைரியமாக நின்று யுத்தம் செய்யக்கூடும்.

* * *

பலம் அவசியம்; உறுதி அவசியம். பலமிருந்தால் யாவும் அடங்கிவிடும். தன்னலங் கருதாத குணங்களைக் கொண்டவனிடம் தேவர்களும் அஞ்சுகின்றனர். தூய்மையான குணங்களின் பலம் அபாரமானது. ஆகவே தைரியமாய் இரு! யாருக்கும் பயப்படாமல் முன்னேற்செல். "நான் ஸத்யமான வஸ்து, தூய்மையானவன், பலமுள்ளவன்" என்று சொல்லுவதற்குக் கற்றுக்கொள்; அப்பொழுது சற்றும் பயமற்றவனாய்விடுவாய். சுயநலங் கருதுவதால்தான் பயம் உண்டாகிறது. ஆகவே முழுமையும் சுயநலமற்றவனாக ஆய்விடு. தைரியத்தைக்கொள்! தைரியத்தைக்கொள்! தைரியத்தைக்கொள்! பலஹீன மாந்தரால் உண்மையை ஒருநாளும் அடையமுடியாது. நீ கண்டது, கேட்டது, கற்றது யாவற்றினுடைய ஸாரத்தையும் எடுத்து உன் வாழ்க்கையிலேயே அதை அனுபவித்தறிய முயற்சிசெய். உலகம் முழுவதும் உனக்கு எதிராக நிற்கட்டும்; உன்னுடைய லக்ஷியத்தைமட்டும் நழுவவிடாதே.

* * *

பயமும் தக்கமும் சிறிதுமின்றித் திடமாக வேலைசெய். தன் குழந்தைகளைப்பற்றிப் பகவான் கவலை யெடுத்துக்கொள்ளுவார். 'நம்முடைய கடமையெல்லாம், வேலை செய்து, பின் மடிவதே!' நியாயமானதைச் செய்; பலமளிப்பதைச் செய்; தூய்மையளிப்பதைச் செய். உயர்ந்த நோக்கத்தைக் கைக்கொள். அமைதியுடன் உயிர்துற. பெரிய விஷயங்களைப் பேசுவதில் பயன் இல்லை. உலகம் உன்னை அங்கீகரிக்காமலிருக்கலாம். அதைப்பற்றி அக்கரையில்லை. உன்னுடைய குணமே உன்னை ஆனந்தமாகவும் சுகமாகவும் இருக்கச் செய்யும்.

* * *

எது வேண்டுமாயினும் வந்து போகட்டும்; நீ எப்பொழுதும் அசையாமல் நிற்க முயற்சி செய். தைரியமாய் நின்று ஸத்யத்தை நேருக்கு நேராகப் பார். உனக்கு ஒரு லக்ஷியம் உண்டானால் அதை அறிந்து அனுபவிக்க உனது ஆயுளையே அளித்துவிடு. நமது லக்ஷியத்திற்காக நம் உயிரையும் தியாகம் செய்ய வேண்டும். நமது லக்ஷியமான பகவானை வழிபட அந்த ஒரே வழிதானுண்டு. பயஹீனத்தினாலல்ல, யதார்த்தகுண மிகுமையினாலுமல்ல, வாஸ்தவமான அன்பினாலும் பலத்தினாலுமே பகவானை நாம் உண்மையாகப் பஜிக்கலாம். முன்னே செல். பின்னால் உள்ளவருக்கு என்ன நேருகிற தென்பதைக் காணத் திரும்பிப்பாராதே. இக்க்ஷணத்தில் என்னைப்போன்ற ஆயிரம்பேர் இறக்கலாம்; ஆனால், இப்பரந்த உலகிற்கு அது எவ்விதத் தீங்கும் செய்யாது. உண்மை அழிவற்றது. அது என்றும் பிரகாசித்து நிற்கும். உண்மையைப் போற்றி அதற்கே உயிரையும் அளி.

* * *

முட்டாள்கள் எதை வேண்டுமாயினும் கூறட்டும். அவர்கள் ஒன்றையும் அறியவில்லையே என்று அவர்களிடம் கருணைகொள். பின்னால் என்ன நடக்கிறது என்பதைக் கவனியாமலே முன் நடந்துசெல். அவர்கள் பின்னால் இரையட்டும், எதை வேண்டுமாயினும் செய்யட்டும். நீ எதையும் கூறாமல், மௌனமாயும் திடமாயும் முன்செல்.

[மகாதேவ தேசாய் அவர்கள் "இளமை இந்தியா"வின் நவம்பர்மீ உகஉ இதழில், "பிராமண—பிராமணரல்லாதார் கேள்வி" என்ற தலைப்பின் கீழ், எழுதியுள்ள நீண்டதோர் "வினாவிடை"க் கட்டுரையின் ஒரு பகுதியை இங்கு மொழிபெயர்த் தளித்திருக்கிறோம்—ப.ர்., ஊழியன்]

## மகாத்மாவின் வர்ணாச்சிரமம்.

காந்தியடிகள் சுற்றுப் பிரயாணம் செய்த பொழுது, தென்னிந்தியாவில் பற்பல இடங்களில் பிராமணரல்லாத நண்பர்கள் அவரைப் பேட்டிகண்டு, பிராமண—பிராமணரல்லாதார் பிரச்னையின் பற்பல அம்சங்களைக் குறித்தும் விவாதித்தார்கள். ஒரேவகையான கேள்விகளே பற்பல இடங்களிலும் அநேகமாகக் கேட்கப்பட்டன. ஆனாலும், ஒவ்வோர் இடத்திலும் கேள்வி கேட்டோரின் 'வாங்கிக்கொள்ளும்' சக்தியையே விடைகளின் போக்கு, சார்ந்திருந்தது. நான் அவற்றையெல்லாம் ஒன்று கூட்டி, ஒரு வினாவிடை உருவத்தில் அவற்றைத் தொகுத்திருக்கிறேன். தஞ்சாவூர், செட்டிமார்நாடு, விருதுநகர், திருநெல்வேலி ஆகிய இடங்களில் நிகழ்ந்த சம்பாஷணைகளெல்லாம் இதில் அடங்கியிருக்கின்றன. மதுரையில் நடந்த சம்பாஷணைகளின் போது, நான் கூடஇல்லை. ஆனாலும், அங்கு விவாதிக்கப்பட்ட விஷயங்களும், இந்தச் சம்பாஷணைத் தொகுப்பில் அடங்கியிருக்கும் என்று கருதுகிறேன். கடலூர், தஞ்சாவூர், கோயமுத்தூர் ஆகிய இடங்களில் பொதுக்கூட்டங்களில் காந்திஜீ நிகழ்த்திய பிரசங்கங்களில், இப்பிரச்னை குறித்துப் பேசியவற்றை, நான் விட்டுவிட்டேன். அவற்றை நான் இப்பத்திரிகையில் ஏற்கனவே அளித்திருக்கிறேன். மேலும், ஏற்கனவே சுருக்கமாக அளிக்கப்பெற்ற சம்பாஷணைகளையும்—உதாரணமாக, உயர்வு தாழ்வைப்பற்றித் திருப்பூரில் நடந்த பேச்சு—நான் விட்டுவிட்டேன்.

### விஷயத்தை விளக்குங்கள்.

காந்திஜீ:—உங்கள் நிலைமையை விளக்குமாறு உங்களை நான் வேண்டுகிறேன். ஏனெனில், உங்கள் நோக்கத்தை நான் புரிந்து கொள்ளாமலோ அதில் அனுதாபங் கொள்ளாமலோ நான் மறுப்பதாகச் சொல்லப்பட, நான் விரும்பவில்லை. இந்த இயக்கத்தின் உண்மையான காரணம் அரசியலைப்பற்றியது என்பதே என் மனத்தில் விழுந்திருக்கும் பதிவாகும்.

பிராமணரல்லாத நண்பர்:—இந்த இயக்கத்தின் அரசியல் அம்சத்தை விளக்கியவர்களுக்கு முந்தியே இவ்வியக்கம் இருந்து வந்திருக்கிறது. சமூக அம்சமும் அவ்வாறே மதசம்பந்தமான அம்சமும் இதில் உள்ளன.

ஒரு கிருஸ்தவ நண்பர்:—பிராமணர்கள் ஏகபோகமாக அனுபவிக்க வேண்டுமென்ற மனப்போக்கைக் கொண்டிருக்கிறார்கள் என்றும், எனவே அவர்களை நம்பக்கூடாது என்றும் உள்ள உணர்ச்சியே, ஜஸ்டிஸ் கட்சி எழுந்ததற்குக் காரணமாகும். இக்காரணத்தினாலேயே தென்னிந்தியப் பிராமணர்களைப் பற்றி மட்டுமே நான் பேசுகிறேன்.

(இந்தச் சந்தர்ப்பத்தில், கேள்விகளும் பதில்களும் தாறுமாறாயிருந்தன. காந்தியடிகளின் பதில்களை மட்டில், நான் சுருக்கமாகத் தருகிறேன்—தேசாய்.)

காந்திஜீ:—ஆனால், இந்தப் பிரச்னையைக் குறித்து நீங்கள் ஆலோசிக்குங்கால், வட இந்தியாவில் பிராமணியம் எந்த வழியில் சென்றிருக்கிறது என்பதை நீங்கள் சிந்திக்க வேண்டாமா? வட இந்தியாவில், ஒரு பிராமணன் எந்த அந்தஸ்தை அனுபவித்துக் கொண்டிருப்பினும், அவருக்கு அது பிராமணரல்லாதாரானாலேயே அளிக்கப் பட்டதாயிருக்கிறது. வட இந்தியாவிலும் மேற்புற இந்தியாவிலும், குறிப்பிட்ட ஒரு தலைவர் பிராமணரா, பிராமணரல்லாதாரா என்பதைக் கவனிப்பதில்லை; அவர் தலைமைவகித்து நடத்தக் கூடியவரா என்பதுதான் கவனிக்கப்படுகிறது. பஞ்சாபில், பிராமணரல்லாதாராகிய லாலாஜபதிராய் அவர்களே உயர்ந்த தலைவராவர். பிராமணரல்லாதாரான சுரேந்திரநாத பானர்ஜீயைப் பிராமணர்கள் எவ்வளவு கொண்டாடுகிறார்களோ அவ்வளவு பிராமணரல்லாதாரும் கொண்டாடுகிறார்கள். பிராமணரல்லாதாரான படேல் சகோதரர்கள், குஜராத்தில், பிராமணரல்லாதாரால் எவ்வளவு கொண்டாடப் படுகிறார்களோ அவ்வளவு பிராமணர்களாலும் கொண்டாடப் படுகிறார்கள்.

தென்னிந்தியாவிலுள்ள நீங்கள், இந்த மதத்தினை மட்டில் இரு கட்சியாகப் பிரிந்திருப்பதாகக் காணப்படவில்லை. ஆனால், இந்நாட்டையே, பிராமணர்—பிராமணரல்லாதார் என்று பிரித்திருப்பதாகக் காணப்படுகிறது. அந்தச் சொல்லுக்குள், முஸ்லீம்களும் கிருஸ்தவரும் கூட அடங்கலாம். எனவே உங்கள் குறிக்கோளையும் இலட்சியங்களையும் குறித்த உங்கள் கருத்தை நீங்கள் தெளிவும், மாசின்மையும் கொண்டதாக்கிக் கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

உங்கள் குறிகள் அரசியல் தன்மையை மட்டிலும் கொண்டவை என்றும், அதிகாரப் பதவிகளைப் பிராமணர்கள் ஏகபோகமாக ஆக்கிக்கொண்டிருப்பதாகச் சொல்லப்படும் ஏகபோகத்தை அழித்து விடுவது என்றும் வைத்துக்கொண்டால், பிராமணரல்லாதார் என்ற சொல்லில் யாவரையும் சேர்த்துக்கொள்ளக் கூடிய உங்கள் விவரணம் ஒருவேளை எனக்கு விளங்கக்கூடும். என்றாலும் கூட, இதிலும் அநேக கஷ்டங்களை நான் காண்கிறேன்.

ஆனால், ஆசாரச் சீர்திருத்தமும், அல்லது சமய சம்பந்தமானதும சமூகசம்பந்தமானதுமான உரிமைக்குறைகளை ஒழித்து விடுவதும், உங்கள் குறிக்கோளாயிருக்குமானால், 'பிராமணரல்லாதார்' என்பதில் இந்துவல்லாதாரையும் சேர்த்துக்கொள்ளக்கூடிய உங்கள் விவரணம் எனக்கு விளங்குவது கஷ்டமாகும். உதாரணமாக, தீண்டாமை அல்லது ஆலயப்பிரவேச விஷயம் இருக்கிறது. மிக உத்தமமான நோக்கங் கொண்டோயாயினும், இதில் இந்துவல்லாதார் ஒருவர், பலனளிக்கும் விதமாக, எப்படித் தலையிடமுடியும்? இஸ்லாம் மதச் சீர்திருத்தத்தைக் குறித்து, முகம்மதியரல்லாதவொருவர் சட்டங்களை யிடலாமா? இந்து மத விஷயத்தில், இந்துவல்லாதார் தலையிடுவதெல்லாம், மிகக் கடுமையான சந்தேகத்துடன் நோக்கப்படும் என்று நான் அஞ்சுகிறேன்.

ஆதலினால் பிரச்னையை நீங்கள் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு தெளிவாக ஆக்கிக்கொள்ளவேண்டும். உங்கள் குறைகள் சம்பந்தப்பட்டமட்டில், அவைபற்றி யாதொரு ஐயமுமில்லை. அவைகள் இருக்கின்றன; அவற்றை ஒழிக்க, நீங்கள் வணங்காப் போராட்டம் தொடுக்கவேண்டியதே. ஆனால், அக்குறைகளைக் குறித்து மயக்கங் கொண்டகருத்துக்களையும் நீங்கள் கொள்ளலாகாது. அதிகாரப் பதவிகள் சம்பந்தப்பட்டமட்டில், இந்தச்சங்கதியில் என்னிஷ்டப்படி செய்ய முடியுமானால், அப்பதவிகளையெல்லாம் உங்களுக்கே விட்டுவிடுமாறு பிராமணர்களுக்கு நான் யோசனை கூறுவேன். கதர்த் தொண்டில் பிராமணர்கள் ஏகபோகம் பெற்றிருக்கிறார்கள் என்ற கூக்குரலை எழுப்புவீர்களாயின், அது எனக்கு விளங்கவேயில்லை. பிராமணரல்லாத மகாஜனங்களுக்கே, முக்கியமாக இவ்வியக்கம் தொண்டுசெய்து வருகிறது; அகில இந்திய சர்க்கா சங்கத்தின் நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களெல்லாம் அநேகமாக பிராமணரல்லாதாராகவே இருக்கின்றனர். கதர்த் தொண்டில் ஈடுபட்டிருக்கும் பிராமணர்கள் இலௌகிக இலாபத்தைப் பெறவே அதற்சேர்ந்திருக்கின்றனர் என்று, தென்னிந்தியாவிலே, நீங்கள், நியாயமாக, வாதிக்கமுடியுமா? தன்னிச்சையான தொண்டு சம்பந்தப்பட்ட மட்டில், 'ஏகபோகம்' என்ற கூக்குரலை யெழுப்புதல் நியாயத்தாகுமா? ஆனால், இவ்விதமாயினும் கூட, எனது தேவைகளைப் பூர்த்தி செய்யக் கூடிய பிராமணரல்லாதாரை எனக்குத் தாருங்கள்; (தந்தால்) பிராமணர்கள் யாவரும் தங்கள் பதவிகளைக் காலிசெய்து விடுவார்கள் என்று உங்களுக்கு வாக்குக் கொடுக்கிறேன். எனக்குத் தெரிந்தமட்டில், அவர்களிற் பெரும்பாலோர், நிறைந்த தியாகத்தைச் செய்தவர்களாவர்.

### வர்ணதர்மம்.

கேள்வி:—வர்ணாச்சிரமதர்மத்தைக் குறித்து நீங்கள் வற்புறுத்திப் பேசுவது எங்களுக்கு விளங்கவில்லை. தற்பொழுதிருந்து வரும் ஜாதிமுறையை நீங்கள் நியாயமென்று கூறமுடியுமா? 'வர்ணம்' என்பதற்கு உங்கள் விவரணம் யாது?

பதில்:—மனிதனது தொழிலை முன்னடியே நிர்ணயித்து வைத்தல் என்பதே 'வர்ணம்' என்பதன் கருத்து. ஒரு மனிதன் தனது ஜீவனத்திற்குச் சம்பாதித்துக் கொள்ள; தனது முன்னோர்களின் வழியைப் பின்பற்றவேண்டும் என்பதே வர்ணாச்சிரம தர்மம். ஒவ்வொரு குழந்தையும், இயற்கையிலேயே, தன் தந்தையின் 'வர்ணத்'தைப் பின்பற்றுகிறது; அதாவது தன் தந்தையின் தொழிலைத் தேர்ந்துகொள்ளுகிறது. ஆகையினால், வர்ணம் என்பது இந்து மதத்தினர் தலைமீது வலியவைக்கப் பட்டதோர் சங்கதியன்று; ஆனால், அவரது நலத்தைப் பாதுகாக்கும் தர்மகர்த்தர்களாயிருந்த மனிதர்கள், இந்து மதத்தினர்க்காக, அவ்விதியைக் கண்டுபிடித்தார்கள். அது மனிதனால் நூதனமாகச் செய்யப்பட்டதன்று; ஆனால், இயற்கையின், மாறுதலடைவிக்க முடியாததோர் விதியாகும்—நியூடன் கண்டுபிடித்த 'ஆகர்ஷணசக்தி' (கிராவிடி) விதியைப்போல, எப்பொழுதும் இருந்துவருவதும் எப்பொழுதும் நடந்து வருவதுமானதோர் இயற்கைச் சக்தியைப் பற்றிய வோர் விளக்கவுரையாகும் அது. ஆகர்ஷணசக்தி'விதி எப்படி அதைக் கண்டுபிடிக்கு முன்னரும்கூட இருந்தேவந்ததோ அவ்வாறே வர்ணதர்மமும் (அதைக் கண்டுபிடிக்கு முன்னரே) இருந்துவந்தது. அந்த விதியைக் கண்டு பிடிக்கும் பெருமை இந்தியர்களுக்குக் கிடைத்தது. இயற்கையின் சில விதிகளைக் கண்டுபிடித்து, அவற்றைப் பிரயோகப் படுத்தியதால், மேனாட்டு ஜனங்கள் தங்கள் இலௌகிகச் செல்வங்களை அபிவிருத்தி செய்துகொண்டார்கள். இவ்வாறே, ஜனசமூகத்திற்குள்ள, தவிர்க்க முடியாத, இவ்வியற்கைப் போக்கை இந்துக்கள் கண்டுபிடித்ததனால், உலகத்துள்ள பிற எந்த நாட்டினரும் அடைந்திராத பலனைப் பாரமார்த்திக விஷயத்தில் பெற அவர்களால் முடிந்தது.

வர்ணத்திற்கும் ஜாதிக்கும் யாதும் சம்பந்தமில்லை. தீண்டாமையைப் போலவே, ஜாதி முறையும், இந்துமதத்திற் பாய்ந்திருந்தும் 'புல்லுருவி'யாகும். இந்நாள் அழுத்திக் கூறப்படுவதான 'புல்லுருவி'கள் எல்லாம் இந்த மதத்தின் பகுதியாக ஒரு பொழுதும் இருந்ததில்லை. இவ்வாறேயான கேவலமான புல்லுருவிகள் கிருஸ்தவமதத்திலும் இஸ்லாம் மதத்திலும்கூடப் பாய்ந்திருக்க, நீங்கள் காணவில்லையா?

அவற்றையொழிக்க, உங்கள் விருப்பங் கொண்டமட்டில் போராடுங்கள். வர்ணம் என்ற வேடம் புனைந்து உலவும் ஜாதிமுறையெனும் அரக்கனைத் தொலையுங்கள். வர்ணத்தின் போலியான இதனாலேயே இந்து மதமும் இந்தியாவும் கீழ்மையடைந்தன. வர்ண தர்மத்தை நாம் பின்பற்றத் தவறியதே, பொருளாதாரத் துறையிலும் பாரமார்த்திகத் துறையிலும் நமது நாசத்திற்குப் பெரிதும் காரணமாகும். வேலையில்லாமைக்கும், வறுமைக்கும் அது ஒரு காரணமாகும். தீண்டாமைக்கும், பலர் நமது மதம் விட்டோடியதற்கும் அதுவே காரணமாகும்.

ஆனால், அசலில் தோன்றிய சட்டம் எய்தியுள்ள, அரக்கத்தன்மை கொண்ட தற்பொழுதைய உருவத்துடனும், அரக்கத்தன்மைகொண்ட தற்பொழுதைய பழக்க வழக்கங்களுடனும், இடும் சண்டையிலே, அச்சட்டத்தையே அழித்துவிடப் போராடாதீர்கள்.

கேள்வி:—எவ்வளவு வர்ணங்கள் உண்டு?

பதில்:—நான்கு வர்ணங்கள்; என்றாலும் அது வர்ண தர்மத்திலேயே அடங்கியுள்ளதோர் கண்டிப்பான பாகுபாடன்று. இருடிகள் ஓய்வின்றிச் சோதனையும் ஆராய்ச்சியும் செய்தபின்னர், இந்த நால்வகைப்பாகுபாடு—ஒருவரது ஜீவனத்துக்குப் பொருள் ஈட்டக்கூடிய நான்கு வழிகள்— என்ற இந்தமுடிவுக்குவந்தனர்.

கேள்வி:—ஆகையால், தருக்க முறைப்படி, எத்தனை தொழில்களுண்டோ அத்தனை வர்ணங்கள் உண்டு என்று ஆகிறதல்லவா?

பதில்:— (அவ்வாறாகவேண்டுமென்ற) அவசியமில்லை. பற்பலவகையான தொழில்களையும், போதனைத்தொழில், பாதுகாப்புத் தொழில், செல்வம் விளைக்கும் தொழில், கையால் தொண்டு செய்யும் தொழில்என்ற நான்கு முக்கியப் பாகுபாட்டுக்குள் அடக்கிவிடலாம். உலகம் சம்பந்தப் பட்டவரையில், செல்வம் விளைக்கும் தொழிலே தலைமையாய் நிற்பது; ஆச்சிரமங்களில், எவ்வாறு யாவற்றினும் தலைமையாய் நிற்பது கிரகஸ்தாச்சிரமமோ அவ்வாறே இதுவுமாகும். வர்ணங்களுக்குச் 'சுருதி' போன்றது வைசியவர்ணமே. செல்வமும், சொத்தும் இல்லாவிட்டால், பாதுகாப்பவன் வேண்டியதில்லை. மூன்றாமதன் பொருட்டே முதலிரண்டும், நான்காமதும் அவசியமாயிருக்கின்றன. முதலாம் வருணத்தவர் எப்பொழுதும் மிகச் சிலராகவே யிருப்பார்கள். ஏனெனில், அவ் வர்ணத்துக்குக் கடுமையான அடக்க ஒழுக்கம் வேண்டும். நன்கு ஒழுங்குசெய்யப் பெற்றதோர் சமூகத்தில், இரண்டாம் வருணத்தவர் சிலரேயிருப்பர்; நான்காம் வருணத்தவரும் அவ்வாறே.

கேள்வி:— பிறப்பினால் தமக்குரியதல்லாதவோர் தொழிலை ஒரு மனிதர் செய்வாராயின், அவர் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவர்?

பதில்:— இந்துக்களின் கொள்கையின்படி, அவர், தாம் பிறந்த வர்ணத்தையே சேர்ந்தவராவர். ஆனாலும், அதற்கிசைய அவர் வாழாமையினால், அவர் தமக்கே தீங்கு செய்து கொண்டவராகி, கீழ்மை எய்தியவர்— பதிதன்—ஆகிறார்.

கேள்வி:— பிறப்பினால் பிராமணருக்குரிய தொழிலை, ஒரு சூத்திரர் செய்கிறார். அவர் பதிதன் ஆகிறாரா?

பதில்: — ஞானத்தைப்பெற, ஓர் பிராமணருக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை ஒரு சூத்திரருக்கும் உண்டு. ஆனால், போதிக்கும் தொழிலின் மூலம் அவர் தமது ஜீவனத்திற்குச் சம்பாதிக்கமுயலின், அவர்தமது வகுப்பினின்றும் விழுந்துவிடுகிறார். பண்டைக்காலத்தில், தானாக நடந்துவந்த, பரஸ்பர உதவிக்கட்டுப்பாடுகள் இருந்துவந்தன. ஒரு தொழிலைச் சேர்ந்த யாவரையும் காப்பாற்றுவது, எழுத்தின் தேவையற்ற சட்டமாக இருந்துவந்தது. நூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு தச்சரின் மகன் ஒரு வக்கீலாக, ஒரு பொழுதும் விரும்பியதில்லை. இந்நாள், அவன் (அவ்வாறாக) விரும்புகிறான். ஏனெனில், பணங் கொள்ளையடிக்க, மிக் எளிதான வழியாக அத்தொழிலை அவன் காண்கிறான். தமது மூளையைச் செலவழிப்பதற்கு ரூ. கடு,000 கட்டணம் விதிக்கவேண்டுமென்று, வக்கீல் நினைக்கிறார்! ஹக்கீம் சாகிபைப் போன்ற ஒரு வைத்தியர், தாம் வைத்திய ஆலோசனை கூறுவதற்குக் கட்டணமாக, நாளொன்றுக்கு க,000 ரூ. கட்டணம் விதிக்கவேண்டுமென்று, கருதுகிறார்!

கேள்வி:— ஆனால், ஒரு மனிதர் தம் உள்ளத்துக் கிசைந்தவோர் தொழிலைப் பின்பற்றலாமல்லவா?

பதில்:— ஆனால், அவர் உள்ளத்திற்கிசைந்ததாக இருக்கவேண்டிய வொரே தொழில், அவரது தந்தையரின் தொழிலாகவே யிருக்கவேண்டும். அத்தொழிலைத் தேர்ந்துகொள்ளுவதில், யாதும் பிசகில்லை; அதற்கு மாறாக, அது மேன்மையானதுமாகும். நாம் இந்நாள் காண்பது இயற்கைக்கு விரோதமானவைகளாகும். அதனாற்றான், ஜனசமூகத்தில் பலாத்காரமும் பிளவும் இருக்கின்றன. மேல் தோற்றமான உதாரணங்களைக்கொண்டு, நாம் குழம்பிவிடக் கூடாது. தங்கள் தந்தையரின் தொழிலையே கைக்கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான தச்சர் மகன்கள் இருக்கிறார்கள். ஆனால் தச்சரின் மகன்களில் வக்கீல்களாயிருப்போர் நூறுபேர் கூட இல்லை. பிறருக்குரிய தொழிலை ஆக்கிரமித்துப் பணம் திரட்டும்பேராசை, பண்டைக்காலத்தில் இருக்கவில்லை. உதாரணமாக, சிசெரோவின் காலத்தில், வக்கீல் தொழில் 'கௌரவத்' தொழிலாகவே யிருந்தது. மதிநுட்பம்படைத்த எந்தத் தச்சரேனும், பணத்திற்காக அல்லாமல் தொண்டு செய்வதற்காக, வக்கீலாவாரானால், அது முற்றிலும் நியாயமாயிருக்கும். பின்காலத்தில், புகழும் செல்வமும் வேண்டுமென்ற பேராசை நுழைந்துவிட்டது. வைத்தியர்கள் ஜனசமூகத்துக்கு உழைத்து, ஜனசமூகம் தங்களுக்குத் தந்ததைக்கொண்டு அவர்கள் திருப்தியுடன் அமைந்திருந்தார்கள். ஆனால், இப்பொழுதே, அவர்கள் வியாபாரிகளாகி, ஜனசமூகத்துக்கே அபாயகரமானவர்களாக்ககூட ஆகிவிட்டார்கள். நோக்கம் கலப்பற்றபரோபகாரமா யிருந்தபொழுது, வைத்தியத் தொழிலும் சட்டம் பற்றிய தொழிலும் தயாளமான தொழில்களென்று அழைக்கப் பெற்றன; அது தகுதியேயாகும்.

(தொடரும்)



## வாரக்கடிதம்.

திரு. மகாதேவ தேசாய் அவர்கள் "இளமை இந்தியா" வின் நவம்பர்மீ உசஉ இதழில் எழுதியுள்ள வாரக்கடிதம் வருமாறு:—

### இலங்கையில்.

இலோனே இலங்கை என்ற பெயரால் இந்தியக்குழந்தைஒவ்வொன்றும் அறிந்திருக்கிறது. எவனுடைய இழிவுகொண்ட வலிமையை இராமன் நிர்நாமஞ்செய்தனரோ அந்த இராவணனது ஞாபகத்துடன் கூட முதன்முதல் நாம் தெரிந்து கொண்டது இலங்கை; பாரதவர்ஷத்துடன் (பாரதநாட்டுடன்) பிரிக்க முடியாத் தொடர்பு கொண்டதென்றும், பிரபு புத்தரது உபதேசங்கள் பரவிப் பலனளித்து இன்னும் உலவிவருமிடமென்றும், தேசசரித்திர அறிவு ஒவ்வொரு இந்தியனுக்கும் கற்றுக் கொடுப்பது இலங்கை; பரம்பரையாய் வந்த எண்ணற்ற இந்தியக் கலைகளைப் பெற்றிருப்பதனால், கலையறிவு பற்றிய மட்டில் எப்பொழுதும் இந்தியாவுடன் ஒன்றியிருந்து வருவது இலங்கை; மேனாட்டினரால், சமுதாயவிஷயங்களில் பெரிதும் பலமாய் வெல்லப்பெற்றிருந்தும், இந்தியரோடு பழக்கமும் உறவும் உடையவர்களாகவே இன்னும் காணப்படும் ஜனங்களைப் பெற்றிருப்பது இலங்கை; பத்தாண்டுகளுக்கு மேலாக அலைந்து திரிந்து கொண்டிருக்கும் காந்தியடிகள், பார்த்துவர வேண்டுமென்று அனவரதமும் வேட்கை கொண்டிருந்த ஒரு நாடாகும் இலங்கை. "இந்நிலவுலகின் தீவுகள் யாவற்றிலும் ஓர் முத்தாக" அதை இலகச் செய்துள்ள, உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அழகினைப் படைத்திருக்கும் இந் நாட்டைப் பார்த்தல் மட்டிலுமன்று, உயிர்த்திருக்கும் புத்த மதத்தை நெருங்கி ஆராய வேண்டுமென்பதும் அவர் நோக்கமாகும். "இயற்கை வளமெலாம் கொண்ட உயரிய தீவு" என்று, இதை அதிசயித்துக் கூறினார் பிஷப் ஹீபர். எனினும், தமது அறியாமையினால், இதன் ஜனங்களை அவர்நிந்தனைபுரிந்தார் இந்த ஜனங்களின் வாழ்க்கையை ஆராய்தல் வேண்டுமென்பது மட்டிலும் அடிகளின் நோக்கமன்று. தமது சொந்த நாட்டைப் போலவே, தன் தேசியத் தன்மையை இழந்து நிற்பதும், 'மேனாட்டு நாகரிகம்' என்ற பெயரின் கீழ் வழங்கி வருவதெதுவோ அதனால் தமது நாட்டைப் போலவே பாழ்படுத்தப்பெற்றுவருவதுமான இந்நாட்டின் ஜனங்களிடம் அனுதாபங் கொள்வதும், முடியுமாயின், அவர்களுக்கு நல்வழி காட்டுவதும் காந்திஜியின் நோக்கமாகும். மேனாட்டு நாகரிகம், ஆங்கிலேயரான சரித்திராசிரியரொருவரது சொற்களிற் கூறின், "தனது சாராயத்தோடும், தனது ரொட்டியுடனும், (மாமிசம் முதலியவற்றைப் பதனழியாது வைத்திருக்க உதவும்) தனதுவெடியுப்புடனும்" இந்நாட்டின் நாச காரியாய் வந்திருக்கிறது.

ஆனால், விஜயம் உண்மையாகவே வந்து சேர்ந்த பொழுது, அது 'பணத்திற்கான' தோர் விஜயமாக நிகழ்ந்தது. கொழும்பு நகர சபையாரிடம், உளங் கலரும வெள்ளையுள்ளத்துடனும், காந்தியடிகள் அவ்வாறே கூறினார்.

எனினும், (நவம்பர்மீ கஉ) கொழும்பில் இறங்கியது முதற்கொண்டு, அவர் சதா வரவேற்புக்களும், நல்வரவும், பெற்றுவருகிறார். இந்தியாவில் எந்த இடத்தும் மிக உள்ளன்புடனும் மிக உற்சாகத்துடனும் அவருக்களிக்கப் பெற்ற வரவேற்புக்களுக்கும், இவற்றை நன்றே ஒப்பிடலாம். நகர சபை சற்றேறக்குறைய சர்க்கார் சபையே யாகும். நகர சபையளித்த வரவேற்பு, நன்கு தேர்ந்த சொற்களால் ஆக்கப் பெற்றிருந்தது. நகர சபையின் தலைவர் அதைப் படித்துக் கொடுத்தார். அவர் 'ஸிவில் ஸர்வீஸ்' வருக்கத்தைச் சேர்ந்த ஒருவர். மாட்சிமை தங்கிய கவர்னர், தமது குடியேற்ற நாட்டுக் காரியதரிசி மூலமாக, காந்திஜிக்கு உள்ளன்புடன் நல் வரவு கூறினார்; நட்பு முறையில் சந்திக்க விரும்பி ஓர் அழைப்பும் விடுத்தார். இவ்விரண்டையும் (நகர சபையின் வரவேற்பையும் கவர்னரின் வரவேற்பையும்) காந்தியடிகள் எதிர்பார்க்கவே யில்லை. எனவே, தம்மிச்சையாகவும் உற்சாகத்துடனும், உளமுருக்கும் வகையில், ஜனங்கள் வரவேற்றது அதிசயமல்ல. அவர் செல்லப்போவதாக அறிவிக்கப் பட்டிருந்த சாலைகளில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் குவிந்து விட்டார்கள். 'டிக்கட்' வைத்து அதன்மூலம் உள்ளே விடுவதால், அநேக இடங்களில் கூட்டங்களைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. எந்த இயக்கத்திற்காகக் காந்தியடிகள் இலங்கைக்குச் சென்றாரோ அதில் தங்கள் அனுதாபத்தைக் காட்டும் நன்கொடைகளையும், தங்கள் நல்வரவேற்பு உபசாரங்களையும் அளிப்பதில் இலங்கைப் பௌத்தரும், கிருஸ்தவரும், இலங்கைஇந்துக்களோடும் இந்தியரோடும், போட்டி போட்டார்கள். 'பணத்திற்கான' ஓர் விஜயமாக இதைக் கருத, அவர்கள் மறுத்துவிட்டார்கள். அவ்வாறின்றி, ஜீவகாருண்யம் பற்றிய ஓர் விஜயமாகவே அவர்கள் கருதினார்கள். கதர்நிதிக்கு, தங்கள் தங்களாலான சிறு சிறு உதவியை, அவர்கள் யாவரும் ஒருவரைப் போலவே உதவினார்கள். தமிழரைப் போலவே இலங்கையரும், தனி நபர்களைப் போலவே சர்க்கார் உத்தியோகஸ்தரும், சாதாரணக் கடைக்காரர்களைப்போலவே சட்டசபை உறுப்பினரும், குமாஸ்தாக்களும், சமையற்காரரும், மயிர் வினைஞரும், தொழிலாளரும், அவர்களுக்கும் அவர்களைவிட அதிக அதிர்ஷ்டசாலிகளான அவர்களது சகோதரருக்கும் சொந்தமானதே போன்ற இவ்வியக்கத்துக்கு உதவினார்கள். நாங்கள் தங்கியிருந்த வீட்டின் ஒரு பகுதி, கதர்க்கடையாக மாற்றப்பெற்றது. பற்பல வகுப்பைச் சேர்ந்த ஜனங்களும், காலைமுதல் மாலை வரையில், கதர் வாங்குவதற்கு வந்து குவிந்துகொண்டே யிருந்தார்கள். இலங்கை ஜனங்கள் காந்திஜிக்கு இம்மகத்தான வரவேற்பை அளித்ததில், அவரைத் தங்களுக்கே சொந்தமானவராகக் கொண்டாடினார்கள். இந்த விஜயத்தின் பற்பல பலன்களில் ஒன்று, முடிந்தால், "அன்னை இந்தியா" இலங்கையுடன் பிரிக்க முடியாதவாறு இன்னும் அதிகமாய் இணைந்துபோகலாம் என்பதாகும். தொழிலாளர் படித்துக் கொடுத்த வரவேற்புப் பத்திரத்தில் இவ்வாறே கூறினார்கள். இது, காந்திஜீ ஆழ்ந்த உணர்ச்சி கொள்ளுமாறு செய்தது.

#### கூட்டங்கள்.

நடந்த பற்பல கூட்டங்களும் எத்தகைத்தென்ற ஒரு குறிப்பையும், பற்பல சொற்பொழிவுகளின் சாரத்தையும் தர முயற்சிப்பது வீணாகும்.

ஆனால், சில விசேஷ அம்சங்களை நான் குறிப்பிடமுடியும். செட்டிமார் நாட்டில் எங்களுக்கு அறிமுகமான செட்டியார்களான இரு நண்பர்கள்—திரு காசிவிசுவநாதச் செட்டியாரும், திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரும்—தாங்களாகவே, எங்களுக்கு முன்னதாக, இலங்கைக்கு வந்து, இங்குள்ள செட்டிமாரான வியாபாரிகளிடம் பிரசாரம் செய்தார்கள். செட்டிமார்களது கூட்டங்கள்—அவற்றில் முதலாவதாக நடந்த கூட்டம் கொழும்பிலாகும்— அவர்களது முயற்சிகளின் வெற்றியாகும். அவர்கள் உதவிய நன்கொடைகள்—எஜமான்களது நன்கொடைகளைவிட அவர்களது குமாஸ்தாக்களின் நன்கொடைகள்—அவர்களுக்கு (திரு. காசிவிசுவநாதன் செட்டியாருக்கும் திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாருக்கும்) பெருமை யளிப்பதாகும். மாணவர்களது நன்கொடைகள், தென்னிந்தியாவின்பற்பலவிடங்களிலும் மாணவர்கள் அளித்த நன்கொடைகளினும் குறைவானவையல்ல. தொழிலாளர் கூட்டம் பிரமாண்டமான திரளாகும். ஒரேசமயத்தில், இரண்டு மொழிபெயர்ப்பாளர்களைக் கொண்டு, அதிற் பிரசங்கம் செய்ய வேண்டியதாயிற்று. ஒழுங்காக ஏற்பாடு செய்யப் பெற்று, ஒழுங்குபட அமைக்கப் பெற்றிருந்த பெற்றி அதற்குரியதாகும். அவர்களது கணிசமான பணமுடிப்பும், அவற்றில் வேலைசெய்த தொண்டர்களது (வாலண்டியர்கள்) அமைதியான உழைப்பும் முற்றும் திரு. குணஸின்ஹ அவர்கள் எடுத்துக்கொண்ட சிரமங்களின் பலனாகும். தொழிலாளர் கட்டுப்பாடு இங்கு எவ்வளவு நன்றாக ஏற்படுத்தப் பெற்றிருக்கிறதோ அவ்வளவு நன்றாக அவர்கள் கட்டுப்பாடு ஏற்படுத்தப் பெற்றிருக்கும் இடங்கள் இந்தியாவில் மிகச்சிலவே காணப்படுகின்றன. ஏறக்குறைய இருபதேபேர்களான மயிர்வினைஞர்—மருத்துவகுலத்தினர்—தங்களது கணிசமான [illegible] ரூ. நன்கொடையை எடுத்துக்கொண்டு, காந்திஜீயின் இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

சென்னையிற் போலவே, கொழும்பிலும் படித்தவகுப்பார் தங்கள் பங்குப் பிரசங்கங்களை, காந்திஜியிடம் பறித்துக் கொண்டார்கள். ஆனால், அது தவிர்க்க முடியாததாகும். சென்னையிலுள்ளோர் அடிக்கடி அவர் பிரசங்கத்தைக் கேட்டிருப்போராகையால், அவர்கள் சாக்குக் கூறமுடியாது; ஆனால், இலங்கை வாசிகளுக்கோ இதுவே முதல் தடவையாகும். பௌத்தர் காங்கிரஸின் வரவேற்பு மனத்திற் பதியத்தக்கதாகும். ஐந்நூற்றுக்கு மேற் பட்ட குருமார் தங்கள் மஞ்சள் அங்கிகளை அணிந்து கொண்டு, வித்யோதயா கல்லூரியின் இடமகன்ற மண்டபத்தில் அமர்ந்து, காந்திஜீயின்மீது தங்கள் ஆசிகளை உச்சரித்தார்கள். ஒளிபெற்றவர் (புத்தர்) மீது காந்திஜீயின் புகழுரையையும், பௌத்தமதமும் இந்துமதமும் அந்தத்தில் ஒன்றேயாமெனும் அவர் கருத்தையும், காந்திஜீயின் பதில் சுருக்கமாக அடக்கிக்கொண்டிருந்தது. புத்த மதத்தைப் பற்றித் தவறாகக் கொள்ளப் பட்டிருப்பன வென்று அவர் அபிப்பிராயப் பட்டுள்ள மூன்று விஷயங்களை, அவர் விளக்கிக்கூற முயன்றார். அவ்வாறு செய்ததில், பௌத்தருக்குத் தமது செய்தியை, அவர் சுருக்கமாக உரைத்தார்.

வாலிப கிருஸ்தவ சங்கத்தில் அவர் நிகழ்த்திய பிரசங்கம், இலங்கைக் கிருஸ்தவருக்கு மாத்திரமான ஒரு பிரசங்கமன்று; ஆனால், உலகமுழுவதிலுமுள்ள கிருஸ்தவருக்கெல்லாமான ஒரு பிரசங்கமாகும் அது. சமீப ஆண்டுகளில் இதற்கு முந்திஒரு பொழுதும்எட்டியிராத அவ்வளவு உள்ளன்புடனும், உருக்கத்துடனும், அது நிகழ்த்தப்பெற்றது. சோதனைவிளக்கை உள்நோக்கிச் செலுத்தி, "வாழ்வை வாழ்ந்து, மதத்திற்கிசைய வாழ்ந்து, அதன் தன்மை தானே விளங்குமாறு விட்டுவிடவேண்டும்" என்று யாவருக்கும் செய்து கொள்ளப்பட்ட வேண்டுகோளாகும் அது. தாம் உண்மையைப்பற்றிச் செய்துவரும் சோதனையில் அக்கூட்டத்தினரின் அனுதாபத்தைப் பெறவும், தாம் எந்த இயக்கத்திற்காக வாழ்ந்து வருகிறாரோ, தாம் எதற்காகத் தம் உயிரையும்விட ஆவல்கொண்டிருக்கிறாரோ அந்த இயக்கத்திலும் அவர்களது அனுதாபத்தைப் பெறவும், அப்பிரசங்கத்தைச் செய்ய முதலில் உத்தேசித்திருந்தார். ஆனால், முதலாவது விஷயத்தைப்பற்றிய சர்ச்சை மிகவும் விரிவாகவும் கூர்மையானதாகவும் ஆகிவிட்டது. அதனால், கதர் விஷயத்தில், ஏசுவின் உபதேசத்திற்குள்ள சம்பந்தத்தைப்பற்றி விவரிக்க, சாவகாசமில்லாது போய்விட்டது.

## "கோஷன் இருக்கிறார்."



டாக்டர் முத்துலட்சுமி அம்மாள்:—சகோதரி! தேவதாசி என்ற முறையில், எனது ஆசாரச் சீர்திருத்தக் கோடரிக்கு உன்னை இரையாக்கப் போகிறேன். வா, அம்மா! 'தேவதாசி' என்ற பெயரை ஒழித்து, உன்னைப் புனிதப்படுகிறேன்.

பலிபீடப்பெண்:—அக்கா! நீ அழாதே. கடவுள் அருளால், கோஷன் பிரபு நமக்கு இல்லையா? அவர் நம்மைக் காப்பாற்றுவார். பயப்படாதே.

# மதிப்புரை.

## இந்துக்கோவில்களின் பரிதாப நிலைமை.

(இது "திராவிடன்" "தமிழ்நாடு" பத்திரிகைகளின் இரண்டு தலையங்கங்களைக் கொண்ட மிகச்சிறுநூல். வெளியிட்டோர் திரிசிபுரம் சுயமரியாதைச் சங்கத்தார். விலை ஒரு புத்தகம் ஒரு பைசா. ஒருரூபாய்க்கு ௨00 புத்தகம்.)

கோவில்களைப் பற்றித் தமிழ் நாட்டில் காந்தியடிகள் சொன்ன கருத்தைத்தாங்கி யெழுதப்பட்ட கட்டுரைகளை இப்புத்தகம் கொண்டிருக்கிறது. இக்கருத்தை நாம் அன்றே ஆதரித்திருக்கிரேம். ஆகலின் இன்று விரிவாகக் கூறுதற்கு ஒன்றுமில்லை.

## திருமுருகாற்றுப்படைச் சிற்றராய்ச்சி.

(ஆசிரியர் தஞ்சை பென்ஷன் டிப்டி கலெக்டர், ராவ்பகதூர் எம். ஆறுமுகம்பிள்ளை. கிரௌன் ௧ X ௮ அளவில் ௬௬ பக்கங் கொண்டது. நல்ல காகிதம். நல்ல அச்சு. விலை அணு ௫.)

"திருமுருகாற்றுப்படை" என்பது பழைய பாட்டு. இது பத்துப்பாட்டில் ஒன்று. இதன் ஆசிரியர் பெரும் புலமை வாய்ந்த நக்கீரனர். இப்பாட்டுக்குப் பண்டு உரை கண்டார் பழைய உரையாசிரியர்களாகிய நச்சினர்க்கினியர் பரிமேலழகர் என்னும் இருவர். இப்பழய நூலின் மூலத்தை இந்நூலில் வெளியிட்டு அதற்கு ஓர் சிற்ருராய்ச்சி செய்துள்ளார் இந்நூல்வெளியிட்ட ராவ்பகதூர் ஆறுமுகம்பிள்ளை என்பார். இந்நூலில் படைவீடாக ஆறைக் கொண்டதைப் பற்றியும் அவற்றின் முறையைப்பற்றியும் ஆராயப்பட்டிருக்கிறது.

## பக்திமார்க்கம்.

(முதனூல் ஆசிரியர் பரமானந்த சுவாமிகள். மொழிபெயர்ப்பாசிரியர் பவானி ஆர். இராமகிருஷ்ணன் பி. ஏ. வெளியிட்டோர் சென்னைத் திருமயிலை இராமகிருஷ்ண மடத்தார். விலையணு ௫.)

இது அழகிய ஐந்து கட்டுரைகளைக் கொண்டதொரு நூல். "பக்தி" "பரிசுத்தம்" "உறுதி" 'பயமின்மை" 'ஆத்மத்தியாகம்' என்னும் ஐம் பெரும் பொருள்களை இந்நூல் விரித்துச் செல்கின்றது கட்டுரைகள் மிகத் திறம்பட அமைந்துகிடக்கின்றன. இத்திருக்கூட்டத்தாரின் இயல்பிற் கேற்பவே பரமானந்த சுவாமிகள் இந்நூலில் வீர உரைகளைக் கொட்டியிருக்கின்ருர். தமிழ் மக்கள் இந்நூலைப்படித்து வீர உணர்வு பெறுதல் அவசியம். இந்நூலில் ஆங்காங்கு பொறுக்கி, இக்கிழமை முதற் பக்கத்தில் வெளியிட்டிருக்கிரேம். அதனைப் படித்துணர்வோர் நிச்சயமாக இந்நூலைப் படிக்க, விழையாமலிரார். புத்துயிர் பெற வேண்டிய நிலையிலுள்ள தமிழ் மக்கள் காதில் உலவத்தக்க நூல்கள் இத்தகையனவே ஆம்.

## முத்திநெறி.

(ஆசிரியர் இராமகிருஷ்ணனந்த சுவாமிகள். மொழிபெயர்த்து வெளியிட்டோர் சென்னைத் திருமயிலையிலுள்ள இராமகிருஷ்ண மடத்தார். விலையணு ௨.)

இந்நூலின் மொழிபெயர்ப்பு நடை செவ்விதாக இருக்கின்றது. இந்நூல் நுவலும் பொருள் மிக உயரியது. உயர்ந்த பொருளைச் சிறந்த தமிழில் அழகுபடச் செப்பும் இச் சிறு நூலை முற்றும் ஆதரிக்கிரேம். இதனைப் படித்துணர வேண்டுவது தமிழ் மக்களின் பெருங்கடன் என்று கூறுவோம். இந்நூலின் மாண்பை மக்கள் உணரும் பொருட்டு, நூலின் சில உரைகளைக் கீழேதருதும்.

"உணவுமட்டும் ஊட்டிவந்தால் ஆனையொன்றை ஆயிசு முழுவதும் கட்டிவைக்கலாம்; வேறு கவலையின்றி அமைந்து நின்றுவிடும். இப்பரிசே அமைந்து கிடக்கின்ற மக்கள், மாக்களின் மிக்கவரன்று. உண்பதினும் உறங்குவதினும் உயிர்த்தலினும் அச்சுறுவதினும் நாமும் நம்மி னிழிந்த விலங்குகளும் ஒன்றே. இவைகளின் மேம்பட்ட புனிதச் செய்கையொன்று ஆற்றுதற்கு அறியோமாயின், நாம் விலங்குகளினின்றும் விலங்குவதெங்ஙனம்?"

"நீர் கடவுளைக் கண்டே தீரவேண்டும். ஆனல் அதற்கு அரும்பாடு படவேண்டும். எத்தனையோ பிறவிகளிலே பொய்ம்மைக் கடவுள் வழிபட்டு வந்தமையா லேற்பட்டுள்ள பழைய பழக்கங்களை முதற்கண் வென்றுகொள்ள வேண்டும். உள்ளத்தையும் புலன்களையும் ஒடுக்க வேண்டும். இயேசு நாதரைப்போன்று இவ்வுடம்பையும் இப் புலன்களையும் சிலுவையிலேற்றிச் செற்றலொழிய, மேலெழும்ப முடியாது; இறந்துவிட்ட இவ்வுடம்பினின்றும் எழும்பிப் போவதற்கு இயலாது. அவ்வாறெழுவதற்கு விழைவீராயின் இச்சாறுடம்பைச் சிலுவையிற் கொன்று புன் புலன்களை வெல்ல வேண்டும். இதை ஒவ்வொருவரும் செய்து தீரவேண்டும்."

## ஆரியருக்கோரு வெடிகுண்டு.

(ஆசிரியர்:—திரு. பா. தாவுத்ஷா சாஹிப், பி. ஏ.; கிரவுன் ஒன்றுக்கு எட்டு அளவில் ௧௮௮-பக்கங்கள் கொண்டது; விலை ரூ. 0—௧௨—0; கிடைக்குமிடம்:— தாருஸ் இஸ்லாம் புத்தகசாலை, தபாற்பெட்டி நெ. ௧௰, சென்னை.)

இந்நூல், சுவாமி தயானந்த சரஸ்வதியாரின் சத்தியார்த்தப் பிரகாசத்தின் ௧௪-ம் அத்தியாயத்துக்கு மறுப்பாக எழுந்திருக்கிறது. எனினும், இதன் ஆசிரியர் பொதுவாக, "சத்தியார்த்தப் பிரகாசம்" முழுவதற்குமே ஓர் மறுப்புப்போலத் தோன்றுமாறு இதனை எழுதியிருக்கிருர். சத்தியார்த்தப் பிரகாசத்தின் முதற்பாகத்தில் பத்து அத்தியாயங்கள் தாம் அடங்கியிருக்கின்றன; பின் அத்தியாயங்கள் இரண்டாம் பாகத்தில் உள்ளன. முதற்பாகத்தில், நமக்குத் தெரிந்த மட்டில், பிறமதம் எதனையும் பற்றி, தயானந்தர் யாதுங் கூறவில்லை. மேலும், பெரும்பாலும், போற்றற்குரிய பல விஷயங்களே அதில் அடங்கியுள்ளன. இரண்டாம் பாகத்திலுள்ள, ௧௪-ம் அத்தியாயத்தில், முகமதிய மதத்தைப்பற்றி விவகரித்திருக்கிருர்.

௧௪-ம் அத்தியாயம் "தாருஸ் இஸ்லாம்" பத்திரிகையில் வந்திருப்பதையே நாம் படித்துப் பார்த்தோம். தயானந்தரது வாதத்தின் போக்கு சிற்சில இடங்களில் ஒப்பத் தகுந்ததாக இல்லத்தானில்லை. காந்தியடிகள் போன்ற பெரியார்களைப்போல, உண்மை என்ற அளவுகோலைக் கொண்டே, எதனையும் அளக்கவேண்டும்; உண்மைக்குப் பொருத்தமற்றவைகளாகப் படுமவற்றை விட்டுவிட வேண்டியது தான் முறையாகும். உண்மையைத் தேடுபவனுக்கு, எந்த மத நூல்களிலும் சிறந்த உண்மைகள் புலப்படும். அவைபற்றிய மட்டில், அவற்றை எற்றுப் போற்றுவதுதான் முறையாகும். முகமதிய நூல்களில், நமக்கு முரண் எனத் தோற்றும் சில கொள்கைகளிருக்குமானல், அவற்றை உடன்படாது விடவேண்டுமேயன்றி, அம்மதத்தை முழுவதுமே குறைகூறி விடலாகாது. இவ்வாறேதான், இந்து மதத்திற்கும், கிருஸ்தவ மதத்திற்கும் கூடவாகும். 'சத்தியார்த்தப் பிரகாசம்' ௧௪-ம் அத்தியாயம் சம்பந்தப்பட்ட மட்டில், தயானந்தசுவாமியவர்கள் இக்குறைக்கு உள்ளாகிருர் என்று நாம் கூறுதுவிட முடியவில்லை. இக்குறை சுவாமிஜியின்பால் தோன்றிய தன் காரணம் 'அதைப்புவிசை' போன்ற பாழும் மதமாற்ற உணர்ச்சிதான் என்றே ஊகிக்கவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு மதத்தினரும் தம் தம் மதத்தினரிடையே உள்ள அழுக்கைத் துடைத்துத் தூய்மைப் படுத்திக் கொள்ள முயலின், மத ஒற்றுமை—ஏன், மதங்கள் யாவும் ஒன்றுபட்டதோர் நிலைகூட—தோன்றிவிடும்.

நிற்க, "சத்தியார்த்தப் பிரகாசத்"தின் ௧௪-ம் அத்தியாயத்தின் மீது எந்தக்குறைகளைக் கூறலாமோ, அதே குறைகளைப் பிரஸ்தாபநூலும் தாங்கிக் கொண்டிருக்கிறது என்பதை நாம் வருத்தத்துடன் கூற வேண்டியிருக்கிறது. எதிரியின் உரைகளை நேர்முகமாகத் தவறென நிரூபித்தல்தான் சாதாரணமாக, நல்லெண்ணங் கொண்ட ஒருவர் கைக்கொள்ளும் மறுப்புமுறையாகும். சத்தியார்த்தப் பிரகாசத்தின் ௧௪-ம் அத்தியாயத்தில் உள்ள கூற்றுக்களில் எவை தமக்கு உடன்பாடல்லவோ அவற்றையெல்லாம், தக்கஆதாரத்துடன் ஏற்றமுறையில் இதன் ஆசிரியர் கண்டித்திருப்பாராயின், அது பொருத்தமாயிருந்திருக்கும் அவ்வாறின்றி, "எட்டிக்குப் போட்டி" என்பதுபோல, இந்துவேதத்தையும் வேறு சிலவற்றையும் தேவையின்றி இழுத்திருக்கிருர். இந்துமதத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்ய, இதன் ஆசிரியருக்கு உரிமையில்லை என்று நாம்கூறவில்லை. எந்த மதத்தைக் குறித்தும், நல்லெண்ணத்துடன் எவரும்ஆராய்ச்சி செய்யலாம். ஆனல், சத்தியார்த்தப் பிரகாசத்துக்கு மறுப்பாய்த்தோன்றிய இவ் "ஆரியருக்கொரு வெடிகுண்"டில் இடம்பெற்றிருக்கும் இந்துமத வேதம் பற்றிய கூற்றுக்கள் பொருத்த முடையனவென்று நமக்குத்தோன்றவில்லை. குரானிலிருந்து சத்தியார்த்தப் பிரகாசத்தில் எடுத்தாளப் பட்டிருக்கும் மேற்கோள்கள் பிசகு என்ற குற்றஞ்சாற்றப்படுகிறது. மொழிபெயர்ப்புகள் தவறு என்பது சாற்றப்படும் குற்றம். இந்து மத நூல்களினின்றும் பிரஸ்தாப நூலின் ஆசிரியர் எடுத்தாண்டிருக்கும் சில மேற்கோள்களும் இதே குற்றத்துக்கு உள்ளாகின்றன என்பதையும் இங்கு நாம் கூறவிரும்புகிரேம்.

# அடிகள் விஜயம்.

௨௰௨ கொழும்பு பௌத்த இளைஞர் சங்கத்தில் மகாத்மா காந்தியடிகள் ஓர் பிரசங்கம் புரிந்தார். மத சம்பந்தமான ஞானம் பற்றியமட்டில், பௌத்த மத நூல்களையே தாம் முதன் முதலில் படித்ததாக, அதில் அவர் குறிப்பிட்டார். மேலும், செட்டியார் மகாஜன சங்கத்தார் ஓர் வரவேற்பு அளித்தார்கள். அதில் அடிகள் ஓர் பிரசங்கம் புரிந்தார். கொழும்பில் கடைசியாக அளிக்கப்பெற்ற வரவேற்பு உபசாரம், ௨௰௨ மாலையில் நடைபெற்றது.

௨௰௨ இரவே, ஸ்பெஷல் ரயில் வண்டியில், அடிகளும் நண்பர்களும் யாழ்ப்பாணத்துக்குப் புறப்பட்டார்கள்.

௨௰௩ காலை, யாழ்ப்பாணம் சேர்ந்தார்கள். அங்கே ஓர் உற்சாகமான வரவேற்பு அளிக்கப்பட்டது. யாழ்ப்பாணம் ரயில்வேஸ்டேஷனில் ஏராளமான கூட்டம் கூடியிருந்தது. மாலையில், எஸ்பிளனேடில், ஓர் பெருந்த வரவேற்பு உபசாரம் நடைபெற்றது. அங்கே பொது ஜனங்களின் சார்பாகவும், யாழ்ப்பாணம் அர்பன் டிஸ்ட்ரிக்ட் கௌன்ஸில் சார்பாகவும், கிராமக் கமிட்டிகளின் சார்பாகவும், தாழ்த்தப்பட்ட வகுப்பார் சார்பிலும், தாழ்த்தப்பட்ட வகுப்பார் சங்கத்தார் சார்பிலும் தனித்தனி வரவேற்புப் பத்திரங்கள் படித்துக் கொடுக்கப்பட்டு, பணமுடிப்புக்களும் அளிக்கப் பட்டன. உள்ளூரில் தந்தம் செய்யப்பெற்ற ஓர் கதர்த்துணியும் சமர்ப்பிக்கப் பெற்றது. அதை ஏலமான விலைக்கு ஏலங்கூறத் துவங்கிய பொழுது, ஒருவரும் கேட்கவில்லை என்றதும், எல்லா வரவேற்புப் பத்திரங்களும், மிக நூதனமான விலைக்கு ஏலம் போய்விட்டன. (ஏலம்போகாத அந்தக் கதர்த் துணியும், மறுநாள் மகாத்மா குறிப்பிட்ட விலைக்கே ஏலம் போய்விட்டது.) இங்கே, மகாத்மா ஓர் அழகிய சொற்பொழிவு நிகழ்த்தினர்.

ராயல் தியேட்டரில் நடந்த, யாழ்ப்பாணம் மாணவர் காங்கிரஸிலும் காந்தியடிகள் ௨௰௨ மாலையில் வரவேற்கப் பெற்ருர். அந்தக் காங்கிரசுக்குத் தலைமை வகித்தவர், ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த விபுலானந்தசுவாமிகள். அவர் அடிகளுக்கு நல்வரவு கூறினர். பின்னர், வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுக்கப்பட்டது. அதற்கு மகாத்மா பதில் உரைத்தார். ௨௰௩ பகல், காந்தியடிகள் பரமேஸ்வரர் கல்லூரி, யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி, காண்டிரோடு ஆங்கிலக் கல்வி ஸ்தாபனம், மணிபாய் இந்துக் கல்லூரி ஆகியவற்றுக்கு விஜயம் செய்தார். சுன்னகத்தில், தாழ்த்தப்பட்ட வகுப்பார் கலாசாலையில் அவ்வாரக் கல்லையும் நாட்டினர். பிற்பகல் மணி இரண்டுக்கெல்லாம், யாழ்ப்பாணத்தை விட்டு வல்லிபுரம் பெரிய மைதானத்துக்குச் சென்ருர். இடைவழியில், நல்லூர், கோபாய், புதூர், அச்சுவேலி, தொண்டைமன்ஞர், வன்னவெட்டுதுறை, காண்டாவனம் முதலியவற்றுக்கும் இன்னும்பல கிராமங்களுக்கும் விஜயம் செய்தார். அவ்விடங்களில், சிறு சிறு பணமுடிப்புக்கள் அளிக்கப்பட்டன. வல்லிபுரம் மைதானத்தில் ஓர் பெருங்கூட்டம் நடைபெற்றது. அதில் ௫000 ரூபாய் அடங்கியதொரு பணமுடிப்பு அளித்தார்கள். சாவகச்சேரி ஆங்கிலக்கலாசாலையாரும், சிவியத் தெருவினரும் வரவேற்று, பணமுடிப்புகள் அளித்தார்கள். ௯-மணிக்குச் சற்றுமுன்னர், யாழ்ப்பாணத்துக்குத் திரும்பிவிட்டார். யாழ்ப்பாணம் கிருஸ்தவப் பாதிரிமாரைச் சந்தித்தார். அதன் பின்னர், எஸ்பிளனேடு சென்ருர். அங்கு தொழிலாளர் ஓர் வரவேற்புப் பத்திரம் படித்துக்கொடுத்து, ஓர் பணமுடிப்பும் அளித்தார்கள். வரவேற்புப் பத்திரமும், பந்தலில் அலங்காரமாகக் கட்டப்பட்டிருந்த ஆழ் வாழைப் பழங்களும் ஏலம்போடப் பட்டன. பின்னர், வைதீகவா வித்தியாலயத்தில், சுவாமி விபுலானந்தரால் வரவேற்கப்பட்டு, இந்துக்களின் கடமையைக் குறித்து அங்கு ஓர் பிரசங்கம் புரிந்தார்.

௨௰௪ யாழ்ப்பாணத்தில் பல கல்லூரிகளுக்கு, மகாத்மா விஜயம் செய்தார். முதன் முதலில், ஸெயின்ட் ஜான் கல்லூரிக்கு விஜயம் செய்தார். கல்லூரியின் பிரின்ஸிபால் ரெவரண்ட் எச். பீடோ, அடிகளை வரவேற்ருர். யாழ்ப்பாணம் ஸென்டிரல் கல்லூரியில், அதன் பிரின்ஸிபால் திரு. ஜே

(௧௩-ம் பக்கம் பார்க்க)

திரு. நாராயணன் அறிவிக்கிறார்:—

| கொழும்பு | ரூ | சதம் |
|---|---|---|
| கடல் தெரு செட்டிமார்கள் | ௪0௧ | 00 |
| ஷை ஹிந்து ருமால்சாக்கன் | ௨௯௫ | ௫0 |
| ஷை சமையல் காரர்கள் | ௧0௯ | ௨௫ |
| இந்திய வாலபா சங்கம் | ௧0௧ | 00 |
| விவேகானந்தர் கழகம் | ௨0௫0 | 00 |
| நாளந்தா வித்யாசாலை | ௪00 | 00 |
| ஆனந்தா காலேஜ் | ௪00 | ௮௬ |
| கைலிவர்த்தகர்கள் | ௨0௫ | 00 |
| மருத்துவகுல சங்கம் | ௪0௧ | 00 |
| ஹியுவதிராஜு தெசவு பள்ளிக்கூடம் | ௯௯0 | ௫0 |
| சித்தி வியாபாரிகளின் சங்கம் | ௧௭௫௪ | ௫0 |
| இலங்கைத்தொழிலாளர்சங்கம் | ௨௭௨௬ | ௭௧ |
| நாடார் சங்கம் | ௨0௧ | 00 |
| கடல் தெரு லாட்ஜ் | ௧0௨ | 00 |
| ஜகிரியா காலேஜ் | ௪00 | 00 |
| தமிழ்நாட்டுப் பெண்களின் சங்கம் | ௧௪௪௫ | 00 |
| சிங்களத்து பெண்கள் | ௧000 | 00 |
| இந்திய இளைஞர் சங்கம் | ௧0௧ | 00 |
| கொழும்பு தமிழர் சங்கம் | ௪௨௫௧ | ௫0 |
| பார்விகன் | ௧00௧ | 00 |
| வித்வவினோத சபா | ௯௨0 | ௨0 |
| ரெட்டியார் மகாஜன சங்கம் | ௯00௧ | 00 |
| சாந்தி சங்கம் | ௭௫ | 00 |
| ஸ்லேவ்தீவுகள் (பொது) | ௧௧0௧ | 00 |
| இளைய பாரத கூட்டம் | ௧௧0 | ௧௧ |
| இந்திய மார்வாரி சமூகத்தார் | ௯௫௧ | 00 |
| இலங்கை இந்தியர் சங்கம் | ௧௮0௧ | 00 |
| இலங்கை இளைஞர் கூட்டம் | ௬0 | 00 |
| ஒய். எம். பி. எ. | ௬௧௫ | ௪௫ |
| சட்ட கலாசாலை | ௯௨0 | 00 |
| கொழும்பு மலையாளிகள் | ௨௬0 | 00 |

ஷண்முகம் அவர்கள் நல்வரவு கூறினார். அதன் பின்னர், உடுவில் பெண்கள் கல்லூரியில், அதன் பிரின்ஸிபாலான கன்னி கிளார்க் என்னும் பெண்மணி, மகாத்மாஜியை வரவேற்றார். அங்கிருந்து, தெல்லிப்பள்ளி நெசவுக் கலாசாலையில், கலாசாலையின் சூப்பரிண்டெண்டால் வரவேற்கப்பட்டார். அவர் ௯00 ரூபாய் பணமுடிப்பும், அவர் மனைவியார் ௧௫0 ரூபாய் பெறுமான ஒரு கழுத்தணியும் அளித்தார்கள். பின்னர், சைவமங்கைச் சங்கத்தாரால் வரவேற்கப்பெற்று, அச்சபையினராலும், ராமனுதன் மனைவியாலும் பணமுடிப்புக்கள் அளிக்கப்பெற்றன. பிற்பகலில், முதலில் யாழ்ப்பாணக் கல்லூரி என்னும் ஸ்தாபனத்தில், அதன் பிரின்ஸிபால் ரெவரண்ட் ஜே. பிகனெல் வரவேற்றார்.

பின்னர், இலங்கை அரசாங்கத்தாரால் அளிக்கப்பட்டிருந்த பிரத்யேகப் படகுகளில் ஏறி, காரித்தீவுக்கு மகாத்மாவும் பிறரும் சென்றார்கள். இங்கு பொதுஜனங்கள் ௫00 ரூபாய் பணமுடிப்பு அளித்தார்கள். பின்னர் காரிநகருக்கு விஜயம் செய்தார். அங்கு சைவமகாசபையாரும், பொது ஜனங்களும் வரவேற்பளித்துப் பணமுடிப்பும் கொடுத்தார்கள். பிறகு, மூலை, சுளிபுரம், ரன்கன்னி முதலிய விடங்களுக்கு விஜயம் செய்தார்கள். ரன்கன்னியிலுள்ள விக்டோரியா கல்லூரிக்கும் விஜயம் செய்யப்பெற்றது. அங்கிருந்து யாழ்ப்பாணம் திரும்பிச் சென்றார்கள்.

யாழ்ப்பாணத்தைவிட்டு ௨௯-௨ மாலை புறப்பட்டு, ௩0-௨ ராமனுதபுரத்திற்கு, மகாத்மாவும் பிறரும் வந்து சேர்ந்தார்கள். ராமனுதபுரத்தில், பொதுஜனங்களின் சார்பாக ஓர் வரவேற்பு நடைபெற்றது. இவ்வரவேற்பு முயற்சிகளில், பெரிதும் பங்கெடுத்துக் கொண்டவர், ராமனுதபுரம் ராஜாவின் இளைய சகோதரரான பாண்டிமகாராஜா ஆவர். மாலையில் நடந்த பொதுக் கூட்டத்தில், ரூ. ௯௫0 அடங்கிய பொதுப் பணமுடிப்பும், மாணவர்கள் சார்பில் ரூ. ௯௫ கொண்டதொரு பணமுடிப்பும் அளிக்கப்பெற்றன.

௩0-௨ இரவே, அடிகள், ஒரிஸாவில் சுற்றுப் பிரயாணம் செய்வதற்காக, "ராமேசுவரம் எக்ஸ்பிர"ஸில் புறப்பட்டுச் சென்றார்.

## கதர் நிதிக்காக இலங்கை வசூல்.

| | ரூ | சதம் |
|---|---|---|
| அரிசி, காய்கறிகடை முதலாளிகள் | ௧௨௫0 | 00 |
| ஷை கணக்கப்பிள்ளைகள் | ௫௫ | 00 |
| இலங்கை தேசீய காங்கிரஸ் | ௬00 | 00 |
| பொது வரவேற்புக் கமிட்டி | ௬௪0௮ | 00 |
| ஏலத்தில் | ௯௫0 | 00 |
| **தனித்தவசூல்** | | |
| ஸ்ரீஜத் வெள்ளையப்ப நாடார் | ௭௬ | 00 |
| பிலிப்பையா | ௫0 | 00 |
| ஸ்ரீமதி எச். வி. அபேவார்டன் | ௫0 | 00 |
| போர்நந்தோ தம்பதிகள் | ௫00 | 00 |
| ஸ்ரீமதி சனம் டபிள்யூ. எ. டி. சில்வா | ௫00 | 00 |
| டாக்டர் எ. டி. குர்யன் | ௧௫ | 00 |
| திரு. சின்னையா செட்டியார் | ௫0 | 00 |
| ,, பில்லிமோரிய | ௨௫ | 00 |
| ,, கே. எஸ். நாராயணய்யர் | ௨௫ | 00 |
| ,, ஏ. இ. டி. சில்வா | ௨00 | 00 |
| ,, எச். டபிள்யூ. பெரியீரா | ௧00 | 00 |
| ,, வேலாயுதம்பிள்ளை | ௫௧ | 00 |
| மிஸ். பந்தரை நாயகியும் மற்றவர்களும் | ௧௧0 | 00 |
| மற்ற சில்லறை வசூல் | ௯௬௫ | ௮௫ |
| பின்னால் வசூலானது | ௨௮௫ | 00 |
| மொத்தவசூல் | ௪0௧௯௫,௪௯ | |

| பிறஇடங்களில் | ரூ | சதம் |
|---|---|---|
| குருணைக்கல் செட்டியார்கள் | ௧0௨௧ | 00 |
| பொது வசூல் | ௧௫00 | 00 |
| மொத்தவசூல் | ௨௫௨௧ | 00 |
| புதத்தவம் கல்லுப்பட்டி குமாஸ்தாக்கள் | ௯௫ | 00 |
| கதிர்காமம், யெட்டிப்போலா | ௧௧௨ | 00 |
| நீர்க்கொழும்பு | ௧௮௧௨ | 00 |
| கொச்சிக்கடை | ௪௯௨ | 00 |
| பளிகொடை தேசிய சங்கம் | ௯0 | ௭௨ |
| சைலா | ௧௫௯0 | ௮௨ |
| நயினமடம் | ௧௨௮ | 0௬ |
| **மாத்தளை** | | |
| மருத்துவகுல சங்கம் | ௫௫ | 00 |
| டௌத்தபள்ளிக்கூடம் | ௨௫ | 00 |
| பொது | ௧0௧௯ | ௨0 |
| திரு. பொன்னையா | ௧௫0 | 00 |
| பள்ளிக்கூட அஸ்திராவிழாவில் | ௨௫௧ | ௪௧ |
| மொத்தவசூல் | ௧௫௭௪ | ௬௧ |
| **கண்டி** | | |
| தர்மராஜா கலாசாலை | ௧௧௧ | 00 |
| ஸ்ரீராகுலா பள்ளிக்கூடம் முதலியன | ௯௧ | 00 |
| பொதுவசூல் | ௪௫00 | 00 |
| இந்திய இளைஞர் சங்கம் | ௭௧ | ௧௬ |
| மருத்துவகுல சங்கம் | ௧௪௧ | 00 |
| இந்தியர் சங்கம் | ௧௧௮௭ | ௫0 |
| திரு பி. எஸ். தேவதாசபிள்ளை | ௪0 | 00 |
| சில்லறைவசூல் | ௯௮ | ௫0 |
| மொத்தவசூல் | ௬௧௫0 | ௧௬ |
| வண்டாரவளை | ௬0௧ | ௬௯ |
| தியாதல்வா | ௪0௯ | 00 |
| அம்புத்தளை | ௯௫௧ | ௫0 |
| **வதுளை** | | |
| பொதுவசூல் | ௪000 | 00 |
| லுணுகலா கிருஸ்தவவாலிபர் சங்கம் | ௨௧௫ | 00 |
| கூட்ட வசூல் | ௨௮௯ | ௯௭ |
| சில்லறை ,, | ௯௫ | ௬0 |
| மொத்த வசூல் | ௪௫௯௯ | ௯௭ |
| டிக்கோயா | ௧௯௫ | 00 |
| தலவாக்கொலை | ௯௧௫ | 00 |
| நானு ஓயா | ௧௫0 | 00 |
| வெளிமடை | ௨௧௫ | ௨௫ |
| திக்குவலை | ௫00 | 00 |
| **நுரளை.** | | |
| பொது வசூல் | ௪0௯௭ | ௧௫ |
| கூட்ட வசூல் | ௫௫௫ | ௯௧ |
| மொத்தவசூல் | ௪௬௫௨ | ௪௬ |
| **அட்டன் தோப்பி தோட்டம்.** | | |
| கார்பாக்ஸ் கூலிகள் முதலானவர்கள் | ௧00 | 00 |
| காஸ்ட்லராக் கூலிகள் ஷை | ௧௯௫ | 00 |
| கங்காணிகள் | ௨௯0 | 00 |
| கடைகள் மூலம் | ௫௫௮ | 00 |
| சில்லறையாக | ௨௧0 | 00 |
| மொத்தம் வசூல் | ௯௫0௬ | 00 |
| பிரிகாதனு | ௧௯௪ | ௨0 |
| வட்டவளை | ௨௯0 | ௫0 |
| **நாவலப்பட்டி.** | | |
| பொது வசூல் | ௧௯௨௨ | ௯௩ |
| ஒய் எம் எம் எ | ௯௯ | ௬௧ |
| சில்லறையாக | ௭௭ | ௯0 |
| மொத்தம் | ௧௪௯௯ | ௯0௩ |
| கடுகன் சோலை | ௪௫ | 00 |
| **கம்பளை.** | | |
| பொது வசூல் | ௧௭௫0 | 00 |
| பள்ளிக்கூடம் மூலம் | ௫௧ | 00 |
| சமையல்காரர்கள் மூலம் | ௪௧ | 00 |
| மருத்துவகுல சங்கம் | ௪௧ | 00 |
| ஆர் இலட்சுமணன்செட்டியார் | ௨௫0 | 00 |
| சில்லறையாக | ௧௬ | ௯௪ |
| மொத்தவசூல் | ௨௧௪௯ | ௯௪ |
| தெக்காலா மஹா ஜனசபை | ௯௬௪ | 00 |
| கடுகாணுவை | ௮௬௪ | ௧௪ |
| **கேகாலை** | | |
| பொதுவசூல் | ௭௯௨ | ௪0 |
| எலம் மூலம் | ௯0 | 00 |
| கூட்டவசூல் | ௧௧0 | ௧௭ |
| மொத்தம் | ௯0௨ | ௫௭ |
| **ஆட்டனகலை.** | ௨௧0 | 00 |
| கண்டியிலிருந்து கொழும்புவரை சில்லறையாக வசூலானது | ௧௬௨ | ௬௮௩ |
| **அம்ப்லாங்கொடை.** | | |
| தமிழர்மூலம் | ௨௬௫ | ௮௫ |
| சில்லறையாக | ௧௪ | ௭௯ |
| மொத்தம் வசூல் | ௨௮0 | ௫௮ |
| பள்ளப்பட்டி | ௫00 | 00 |
| துடந்துவா | ௫௫ | ௬௫ |
| திரன்காமம் | ௧௨௯ | ௨௧ |
| தளைவளை பள்ளிக்கூடம் | ௧௧ | ௯0 |
| முரட்டை | ௫௮௮ | ௬0 |
| கலித்துறை | ௧௬௯௫ | ௮௫ |
| ஓராஞ | ௪௭௨ | ௧௯ |
| **காலி** | | |
| உடுகாமம் கங்காணிகள் | ௨00 | 00 |
| தமிழர்கள் | ௫௮ | 00 |
| மகாஜனசபை | ௧௮0 | ௪௫ |
| செட்டிமார்கள் | ௫0௧ | 00 |
| கணக்கப்பிள்ளைகள் | ௯௯௧ | 00 |
| நாடக மூலம் | ௨00 | 00 |
| மகிந்தா கலாசாலை | ௪௬௫ | 00 |
| எலம் மூலம் | ௨0 | 00 |
| சில்லறையாக | ௧௬ | 00 |
| பின்னால் வசூலானது | ௪௯ | ௧0 |
| மொத்த வசூல் | ௨0௪0 | ௫௫ |
| **மாத்துறை** | | |
| பொதுவசூல் | ௮௯௯ | ௪௫ |
| மோட்டார் டிரைவர் சங்கம் | ௧00 | 00 |
| மாணவர்கள் | ௪00 | 00 |
| மருத்துவகுல சங்கம் | ௬0 | ௪௫ |
| சில்லறையாக | ௯0 | 00 |
| **தனித்த நன்கொடைகள்** | | |
| ஸ்ரீமதி பிரசாத் | ௫0 | 00 |
| திரு. என் குணசேகரன் | ௫0 | 00 |
| ,, ஜே. பி. கார்டோஸ் | ௨௫ | 00 |
| ,, சுந்தரம்பிள்ளை | ௨௫ | 00 |
| ,, அபயசேகரன் | ௫00 | 00 |
| மொத்த வசூல் | ௧௮௯௯ | ௯0 |
| தொடைகாமம் | ௧௫0 | 00 |
| அக்குமனு | ௨௫0 | 00 |
| அம்பலவட்டை | ௨௧ | ௬0 |
| லண்டனில் படிக்கும்இலங்கை மாணவர்களால் தந்திமணியார்டர் மூலம் | ௫௯ | 00 |
| மற்றொருவர் மணியார்டர் மூலம் | ௯ | 00 |
| பணதுரை | ௧௮௩0 | 00 |
| கனமல்லா | ௨00 | ௩௪ |
| திருக்கோணமலை | ௯௧௨ | 00 |
| ஏலம் மூலம் | ௧௨ | 00 |
| பாலை | ௨0 | ௫௧ |
| நாதண்டியன் தோட்டம். | ௪௫ | ௫0 |
| மொத்தம் | ௮௬,௭௨௪ | ௧௭ |
| வெள்ளவத்தித்துறை | ௪௭0 | ௨௫ |
| ஏலம் மூலம் | ௬ | 00 |
| | ௪௭௬ | ௨௫ |
| பாய்ண்ட் பெட்ரோ | ௧0௩௪ | ௪௧ |
| யாழ்ப்பாணம் நகரசபை காரியதரிசி சங்கம் | ௫௨ | ௪௨ |
| சினடன் | ௨௫௯ | ௫௭ |
| யாழ்ப்பாணம் தொழிலாளர்கள் | ௫௯௪ | ௬௮ |
| இந்துக்கள் கூட்டத்தில் | ௪௮ | ௯௩ |
| செம்மா தெருவு | ௧0௭ | 00 |
| செண்ட்ஜோஸப் கலாசாலை | ௨௫௮ | ௮0 |
| செண்ட்ரல் கலாசாலை | ௨௭௬ | 00 |
| ராமனுதன் பெண் கலாசாலை | ௧௧௧௧ | 0௮ |
| மலாகன் ஆங்கில பள்ளிக்கூடம் | ௧0௧ | 00 |
| தெல்லிபளை | ௬௧௭ | ௨0 |
| சுளிபுரம், செங்கணை | ௯0௯ | 00 |
| விக்டோரியா கலாச்சாலை | ௨௮0 | 00 |
| சித்தன்கரை பள்ளிக்கூடம் | ௧0௫ | 00 |
| வடுக்கொடை | ௯௫ | 00 |
| யாழ்ப்பாணம் கலாசாலை | ௬00 | 00 |
| காரைநகர் | ௫௯௮ | ௪0 |
| யாழ்ப்பாணம் ரயில்வே ஸ்டேஷன் வசூல் | ௧௨௯ | ௬0 |
| மூர்லி, தோல்புரம் | ௨௮0 | ௪0 |
| சயட்ஸ்தீவுகள் | ௬௫0 | 0௯ |
| பண்டதாணும் ஆங்கில பள்ளிக்கூடம் | ௯௩ | ௯௨ |
| ஆஸ்பத்திரி உத்யோகஸ்தர்கள் | ௪0 | 00 |
| உவுநயா | ௧௨௫ | 00 |
| மடவச்சி | ௧0௬ | ௭௫ |
| ஏலம் மூலம் | ௧௧௪௭ | 00 |
| சில்லறையாக | ௨௮௭ | ௮௬ |
| மொத்தம் | ௧௮௨௮௧ | ௬௯௩ |
| **யாழ்ப்பாணம்.** | | |
| பொது வசூல் | ௧௯௫௭ | ௧0 |
| தாழ்த்தப்பட்டவருக்காக தொண்டு செய்யும்சங்கம் | ௧௮0 | 00 |
| கிராம கமிட்டிகள் | ௭0௯ | ௭௫ |
| கூட்ட வசூல் | ௯௨ | ௪௯ |
| பரமேஸ்வரகலாசாலை | ௫௯௬ | ௬0 |
| மணிபை ஹிந்துகலாசாலை | ௫0 | 00 |
| 'ஹிந்து ஆர்கன்' மூலமாக மலாய் நாட்டுச் சந்தா | ௮௫௨ | ௫0 |
| சன்னகரா | ௬௫௧ | ௪௯ |
| எலம் மூலம் | ௨௫ | 00 |
| ஹிந்து கலாசாலை | ௭0௭ | 00 |
| சண்டுவோடை பள்ளிக்கூடம் | ௨௨௯ | ௫௯ |
| யாழ்ப்பாண இந்தியர்கள் | ௧௯0௩ | ௨௫ |
| விஸ்வகர்மா ஐசய சங்கம் | ௧௧௫ | ௪௫ |
| சன்னக்கரை தாழ்த்தப்பட்டாரது பள்ளிக்கூடஅஸ்திவார விழாவில் | ௪0 | 00 |
| இந்துக்கள் கூட்டம் | ௪௭ | 0௬ |
| அனுருத்தபுரம் தனித்தவசூல் | ௯0 | 00 |
| சாவகச்சேரி | ௨௧௯ | ௫0 |
| கோப்பை | ௧௪௪ | 00 |
| தொண்டை மண்ணர் | ௪00 | 00 |
| விஜய மாதிமனுகோவில் | ௯0 | ௮௧ |
| ஆகமொத்தம் ரூ | ௧0௫00௬ | ௬௯௩ |
| நாணயமாற்றில் பவுன் ஒன்றக்கு ௭-சதம்வீதம்௫௪பவுனுக்குகழிவு | ௩ | ௭௮ |
| ஆக மொத்தம் | ௧0௫00௨-௮௫௩ | |

ரூ　அ　பை
அல்லது ரூ ௧0௫00௨—௧௨—௯

## நான்காம் பாகம்.

### அத்தியாயம் உஅ.

கஸ்தூரிபாய் காந்தி தனது வாழ்க்கையில், மும்முறை கடுமையான நோயுற்ருள். அவற்றில், மரணத்தறுவாயிலிருந்து பிழைத்துக்கொண்டாள். வீட்டுவைத்தியத்தினுலேயே அவள் குணமடைந்தாள். இவற்றில் முதலாவது நிகழ்ந்தபொழுது, சத்யாக்கிரகம் நடந்து கொண்டு அல்லது துவக்கும் தறுவாயிலிருந்தது. அவளுக்கு அடிக்கடி இரத்தப்போக்கு உண்டாயிற்று. இரணவைத்திய முறைப்படி சத்திரம் (ஆபரேஷன்) செய்து கொள்ளுமாறு, வைத்திய நண்பரொருவர் ஆலோசனை கூறினர். சிறிது தயக்கிவிட்டு, அதற்கு அவள் இசைந்தாள். அவள் மிகவும் உடல் மெலிந்து போயிருந்தாள். எனவே, 'குளோரபாரம்' (மயக்கமருந்து) இல்லாமலே, டாக்டர் அவளுக்கு 'ஆபரேஷன்' செய்யவேண்டியதாயிற்று. அதனுல் பலன் ஏற்பட்டது. ஆனுலும், அவள் மிகுந்த நோவால் வருந்தவேண்டியதாயிற்று. என்ருலும், அதிசயிக்கத்தக்க தைரியத்துடன், அவள் அதைச் செய்து கொண்டாள். டாக்டரும் அவரது மனைவியும் அவளுக்கு மிகுந்த கவனத்துடன் பணிவிடை செய்தார்கள். இது தர்பானில் நடந்தது. ஜொகான்ஸ்பர்க்குக்குப் போக, டாக்டர் எனக்கு அனுமதி தந்தார். நோயாளியைக் (கஸ்தூரிபாய்காந்தி) குறித்துக் கவலையேதுவும் கொள்ளவேண்டியதில்லை யென்றும் கூறினர்.

என்ருலும், சில நாட்கள் கழித்து, கஸ்தூரிபாயின் நோய் இன்னும் அதிகரித்து விட்டதென்றும், படுக்கையில் உட்காரக்கூடச் சக்தியில்லையென்றும், ஒருமுறை அவள் மூர்ச்சையடைந்து போனதாகவும் ஒரு கடிதம் கிடைக்கப் பெற்றேன். என்னுடைய அனுமதியின்றி, அவளுக்குத் தாம் மாமிசமாவது, சாராயமாவது கொடுக்கக் கூடாதென்று டாக்டருக்குத் தெரியும். எனவே அவளுக்கு இறைச்சிச் சாறு (bcef tea) கொடுக்க அனுமதி தருமாறு, ஜொகான்ஸ்பர்க்கிலிருந்த என்னை அவர் 'டெலிபோன்' மூலம் கேட்டார். நான் அதற்கு அனுமதி தர முடியாதென்றும், ஆனுல் இவ்விஷயத்தில் தனது இஷ்டத்தை வெளியிடக்கூடிய நிலைமையில் அவள் இருந்தால் அவளுடைய யோசனையைக் கேட்டுக் கொள்ளலாமென்றும், அவள் தன்னிஷ்டம்போல் நடந்து கொள்ளலாமென்றும், "டெலிபோன்" மூலமே அவருக்குப் பதில் கூறினேன். டாக்டர் கூறியதாவது:— "ஆனுல் இக்த விஷயத்தில் நோயாளியின் இஷ்டத்தை நான் கேட்கமாட்டேன். நீங்களே வரவேண்டும். எனக்குஇஷ்டமான உணவை உங்கள் மனைவிக்கு விதிக்க நீங்கள்எனக்குச் சுதந்தரம் அளிக்காவிட்டால் உங்கள் மனைவியின் உயிருக்கு நான் பொறுப்பாளியாகமாட்டேன்."

அன்றே ரயில்வண்டியேறி, தர்பானுக்குச் சென்று, டாக்டரைக் கண்டேன். "உங்களுக்கு 'டெலிபோன்' மூலம் கூறு முன்னரே, உங்கள் மனைவிக்கு இறைச்சிச் சாற்றைக் கொடுத்து விட்டேன்" என்ற செய்தியை அவர் மெல்லக் கூறினர்.

"ஆயின், டாக்டர்! இதை நான் மோசடி என்று சொல்லுகிறேன்" என்று நான் கூறினேன்.

"ஒரு நோயாளிக்கு மருந்தும் பத்தியமும் விதிப்பதில் மோசடி ஒன்றுமில்லை. நோயாளிகளையும் அவர் உறவினரையும் ஏமாற்றுவதனுல் நோயாளிகளைக் காப்பாற்ற முடியுமானுல், அவ்வாறே செய்வதை ஓர் நற்செயலாகவே டாக்டர்களாகிய நாங்கள் உண்மையிலே கருதுகிறோம்" என்று உறுதியுடன் டாக்டர் கூறினர்.

எனக்கு ஆழ்ந்த வருத்தம் உண்டாயிற்று. என்ருலும், அமைதியாயிருந்தேன். டாக்டர், நல்ல மனிதர்; எனது நண்பருமாவர். அவருக்கும் அவரது மனைவிக்கும் நான் நன்றி பாராட்டக் கடன்பட்டவன். ஆனுலும், அவரது வைத்திய நீதிகளை ஏற்றுக் கொள்ள, நான் தயாராயில்லை.

"டாக்டர்! இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டுமென்று உங்கள் யோசனையைக் கூறுங்கள். என் மனைவி அதனுல் மரணமடைய நேரினும் சரி, அவளுக்கு மாமிசமாவது இறைச்சியாவது கொடுக்க, அதைச் சாப்பிட அவளே விரும்பினுலன்றி, நான் ஒருபொழுதும் அனுமதிக்கமாட்டேன்" (என்று நான் கூறினேன்.)

# காந்தியடிகளின் சரிதம்.

## கஸ்தூரிபாயின் துணிவு.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

"உங்கள் வேதாந்தத்தை நான் ஏற்கிறேன். உங்கள் மனைவி என்னுடைய வைத்தியத்திலிருக்கும் வரைக்கும் என்னிஷ்டப்பட்டதை அவளுக்கு நான் கொடுக்கும் சுதந்திரம் எனக்கிருக்க வேண்டும் என்று நான் உங்களுக்குக் கூறுகிறேன். இது உங்களுக்கு இஷ்டமில்லாவிட்டால், அவளை அழைத்துச் செல்லுங்கள் என்று உங்களை கேட்டுக் கொள்ள வேண்டியதுதான். அது எனக்கு வருத்தமேயாகும். என்வீட்டிலே அவள் இறப்பதை நான் பார்க்கமுடியாது" (என்ருர் டாக்டர்.)

"நான் உடனே அவளை அழைத்துச் செல்ல வேண்டும் என்பது உங்கள் கருத்தா?" (என்றேன் நான்.)

"அவளை அழைத்துச் செல்ல வேண்டுமென்று உங்களை நான் எப்பொழுது கேட்டுக் கொண்டேன்? முற்றும் என்னிஷ்டப்படி விடவேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். நீங்கள் அவ்வாறு செய்வீர்களாயின், அவளுக்கு எங்களால் முடிந்ததையெல்லாம் நானும் என்மனைவியும் செய்வோம். அவள் விஷயத்தில் கொஞ்சமும் கவலையின்றி நீங்கள் செல்லலாம். ஆனுல், இவ்வெளிய விஷயத்தை நீங்கள் புரிந்துகொள்ளாவிட்டால், எனதிருப்பிடத்திலிருந்து அவளை நீங்கள் அழைத்துச் செல்லுமாறு உங்களை நான் கேட்டுக்கொள்ளும்படி, நீங்கள் என்னை நிர்ப்பந்திக்கிறீர்கள்." (என்று அவர் கூறினர்.

என் மகன்களில் ஒருவன் என்னோடிருந்தானென்று நினைக்கிறேன். அவன் நான் சொன்னதை முற்றிலும் ஏற்றுக் கொண்டான். கஸ்தூரிபாய்க்கு இறைச்சிச் சாறு கொடுக்கக் கூடாதென்று அவன் கூறினுன். அடுத்தாற்போல, நான் மனைவியிடம்பேசினேன். இந்த விஷயத்தில் அவளிடம் ஆலோசிக்கக் கூடாத அவ்வளவு பலவீனமாக, அவள் இருந்தாள். ஆனுல், அவளை ஆலோசிப்பது வருத்தந்தரத்தக்கதாயினும், அது எனது கடமையென்று நான் கருதினேன். டாக்டரும் நானும் பேசிக்கொண்ட விஷயத்தைக் குறித்து அவளிடம் சொன்னேன். அவள், உறுதியான ஓர் பதிலை அளித்தாள். அதாவது:— "நான் இறைச்சிரஸத்தை உட்கொள்ள மாட்டேன். உலகில் மனிதப்பிறவி எடுப்பது ஓர் அரிய விஷயமாகும். அருவருக்கத்தக்க இத்தகைய வற்ருல் எனது உடம்பை அசுத்தப்படுத்திக் கொள்ளுவதைவிட, உங்கள் புயத்திலே மரணமெய்துவதையே நான் பெரிதும் விரும்புவேன்."

அவளுடன் நான் விவாதித்தேன். என்னைப் பின்பற்றி நடக்க, அவள் கடமைப்பட்டிருக்கவில்லையென்று அவளிடம் நான் கூறினேன். மருந்து என்ற ரீதியில் மாமிசத்தையும் சாராயத்தையும் உட்கொள்ளுவதில் ஆட்சேபம் கொள்ளாத எனது இந்து நண்பர்களையும் அறிமுகமானவர்களையும் உதாரணங்களாக, அவளிடம் கூறினேன். ஆனுல், வச்சிரம் போல் அவள் உறுதியாயிருந்தாள். "அல்ல, உடனே என்னை அழைத்துச் செல்லுங்கள்" என்று அவள் கூறினுள்

நான் களிப்புற்றேன். சிறிது உளக்கலக்கத்துடனேயே, அவளை அழைத்துச்செல்ல தீர்மானித்தேன். அவளது தீர்மானத்தைக் குறித்து, டாக்டரிடம் நான் தெரிவித்தேன். அவர் கோபத்துடன் கூறியதாவது.- "என்ன கன்னெஞ்சம் கொண்ட மனிதர் நீங்கள்! அவளது இப்பொழுதைய நிலையில், அவளிடம் இதைப்பற்றிக் கூறியதற்கு நீங்கள் வெட்கப்பட வேண்டும். உங்கள் மனைவியை அழைத்துச் செல்லத்தக்க நிலையில் அவள் இல்லையென்று நான் உங்களுக்குக் கூறுகிறேன். உடம்பு மிகச் சிறிது குலுங்குவதையும் கூட, அவளால் தாங்கமுடியாது. வழியில் அவள் இறந்துபோனுலும், நான் அதிசயமுறேன். ஆனுலும், நீங்கள் பிடிவாதம் செய்தால் உங்கள் இஷ்டப்படியே செய்யலாம். அவளுக்கு இறைச்சிச்சாறு கொடுக்க உங்களுக்கு விருப்பமில்லையானுல், ஒருநாள் கூட என் வீட்டிற்குள் அவளை வைத்திருக்கும் ஆபத்திற்கு நான் உட்படேன்."

எனவே, உடனே அவ்விடத்தை விட்டு நீங்க, நாங்கள் தீர்மானித்தோம் தர்பானிலிருந்து பீனிக்சுக்குச் செல்லும் ரயில் வண்டியில் ஏறிச்சென்றோம். அங்கிருந்து, ரஸ்தாமார்க்கமாய், இரண்டரை மைல் தூரத்திலிருந்த எங்கள் குடியிருப்புக்குப் போய்ச் சேர்ந்தோம். சந்தேகமின்றி, பெரிதும் அபாயமான ஒன்றுக்கு நான் துணிந்தேன். ஆனுலும், நான் கடவுளிடம் நம்பிக்கை கொண்டு, எனது அலுவலைச் செய்யத்தொடங்கினேன். தூக்குமஞ்சம் (ஹாமக்) ஒன்றையும் ஒருசேர் நிறைய சூடானபாலும், ஒரு சேர் நிறைய சூடான தண்ணீரும் எடுத்துக் கொண்டு, எங்களை அழைத்துச் செல்ல ரயில்வேஸ்டேஷனுக்கு வருமாறு, திரு. வெஸ்டு அவர்களுக்கு, முன்னுடியே ஒரு ஆள் மூலம் செய்தியனுப்பினேன். கஸ்தூரிபாய் காந்தியை மஞ்சத்தில் தூக்கிச்செல்ல ஆறு ஆட்களையும் அழைத்துவருமாறு செய்தியனுப்பினேன். அடுத்தாற் போலக்கிடைக்கக்கூடிய ரயில் வண்டிக்குக் கஸ்தூரிபாய் காந்தியை அழைத்துச் செல்லுவதற்காக, ஒரு'ரிக்ஷா' வண்டியைப்பிடித்தேன். அந்த அபாயகரமான நிலையில், அவளை அதில் வைத்துவிட்டு. நடக்கலானேன்.

கஸ்தூரிபாய் காந்தியை உற்சாகப்படுத்திக்கொண்டிருக்க வேண்டியதாயில்லை. அதற்கு மாருக, "எனக்கு ஒன்றும் நிகழ்ந்துவிடாது. நீங்கள் தொந்தரைப்படாதீர்கள்" என்று அவள் எனக்குத் தேறுதல் சொன்னுள்.

நாட்கணக்காக ஊட்டமில்லாததால், அவள் வெறும் எலும்பும் தோலுமாக விருந்தாள். ரயில்வே ஸ்டேஷனின் 'பிளாட்பாரம்' மிகப் பெரியது. ரிக்ஷா உள்ளே செல்லமுடியவில்லை. அதனுல், ரயில்வண்டியின் கிட்டச் செல்லுவதற்குச் சிறிதுதூரம் நடந்து செல்ல வேண்டியிருந்தது. எனவே, அவளை எனது புஜத்தில் அணைத்துத் தூக்கிச்சென்று, ரயில்வண்டியில் விட்டேன். பீனிக்ஸிலிருந்து, மஞ்சத்தில் நாங்கள் அவளைச் சுமந்து சென்ருேம். அங்கே ஜலவைத்தியத்தின் மூலம் அவள் மெல்ல உடல்வலிவு பெற்ருள்.

நாங்கள் பீனிக்சுபோய்ச் சேர்ந்த மூன்று அல்லது நான்கு தினத்தில் எங்கள் இருப்பிடத்திற்கு ஓர் சுவாமி வந்து சேர்ந்தார். டாக்டரது யோசனையை நாங்கள் தள்ளிவிட்ட விதத்தை அவர் கேள்விப்பட்டு எங்களிடம் கொண்ட அனுதாபத்தினுல் எங்களிடம் வாதிப்பதற்காக, அவர் வந்தார். சுவாமியவர்கள் வந்தபொழுது, எனது இரண்டாவது மகன் மணிலாலும் மூன்ரும் மகன் ராமதாசும் என்னோடிருந்ததாக, எனக்கு ஞாபகம். மாமிசம் உண்பது, சமயக்கோட்பாட்டின்படி நீங்கற்றது என்று அவர் அபிப்பிராயங்கூறி, மனுவிலிருந்து அதற்குப் பிரமாணங்களை மேற்கோள்களாகக் கூறினர். இந்த விவாதத்தை எனது மனைவியின் முன்னிலையில் அவர் செய்தது எனக்குப்பிடிக்கவில்லை. ஆனுலும், அவர் அவ்வாறு செய்ததை மரியாதைக்காக, நான் பொறுத்துக் கொண்டேன். மனுஸ்மிருதியிலிருந்தும் எடுத்துக் கூறப்பட்ட சுலோகங்கள் எனக்கே தெரியும் எனது மனநிச்சயத்திற்கு, அவை எனக்குத் தேவையில்லை. இந்தச் சுலோகங்கள் இடைச்செருகல் என்று மதிக்கும் ஒரு சாராரும் உளர் என்பதும் எனக்குத் தெரியும். அவை இடைச்செருகலாயில்லாவிடினுங்கூட, சமய சம்பந்தமான பிரமாணங்களைச் சாராமலே, தாவர உணவுக்கொள்கையில் எனது அபிப்பிராயங்களை நான் கொண்டிருந்தேன். கஸ்தூரிபாயின் நம்பிக்கை, அசைக்கமுடியாததாயிருந்தது. சமயநூல்களின் பிரமாணங்கள் அவளுக்கு மூடிமுத்திரை வைக்கப்பட்ட புத்தகமாயிருந்தன. ஆனுலும், அவளது மூதாதைகளின் பரம்பரையாகவந்த மதமே அவளுக்குப்போதியதாயிருந்தது. எனது குழந்தைகள் தங்கள் தந்தையின் கொள்கையை ஆதரித்து, சுவாமியின் வாதத்தை இலேசாய்க் கருதினர்கள். ஆனுல், என் மனைவி சம்வாதத்தை உடனே நிறுத்திவிடச்செய்தாள். அவள் சொல்லியதாவது:— "சுவாமிகளே! நீங்கள் என்ன சொன்னுலும் சரியே, இறைச்சிச் சாற்றைக் கொண்டு, உடம்பு குணமடைய நான் விரும்பவில்லை. உங்களுக்கு விருப்பமாயின், இந்த விஷயத்தைக்குறித்து என் கணவரிடமும் என் குழந்தைகளிடமும் விவாதிக்கலாம். ஆனுல் எனது மனத்தில் நான் நிச்சயப்படுத்திக்கொண்டு விட்டேன்."

---

# நமது போர் முறை.

நண்பர்:—வேதநிதி சாஸ்திரியாரே! தங்களைப்பார்த்து வெகுநாளாய் விட்டது. "உயிர் துறந்தும் உரிமையை நாட்டு" என்று எழுதியிருந்தீர்களே ஒரு நூல். அப்பா! என்ன நூல்! என்ன எழுச்சிகொண்டது! அதற்குப் பின்னர், வேறு ஏதாவது நூல் வெளியிட்டுள்ளீர்களோ?

வேதநிதி சாஸ்திரியார்:—என் நூல்களுளெல்லாம் மிகச் சிறந்ததாக இலகக்கூடிய ஒரு நூலை இப்பொழுதே முடித்துக்கொண்டிருக்கிறேன். "பெண்களின் உரிமை கடவுளின் வரன்" என்பது அதன் பெயர். அதில் நான் கூறியிருக்கும் விஷயங்களுக்காக, இந்த அரசாங்கம் என்னையே சிறையில் போட்டாலும் போட்டுவிடும். எனினும், நான் எதற்கும் அஞ்சவில்லை.

நண்பர்:—உங்கள் உறுதியும் துணிவும் எனக்குத் தெரியாதா என்ன? அது ஒருபுறமிருக்க, இந்தப் பெண்மணிகள் யாவர்?

வேதநிதி சாஸ்திரியார்:—ஒருத்தி என் மகள்; மற்றவள் என் மருமகள்.

## பொருள் அடக்கம்.



மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பாரதத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற்கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
பிரபவ-ஸ்ரீ கார்த்திகை-மீ உகஉ

# இலங்கை.

இலங்கை இந்தியாவுக்குப்புறம்பான ஒரு நாடாக இருப்பினும் புறம்பென்று தோன்று நிலையில் நெருங்கிய தீவாக இருக்கிறது. அதிலும் தமிழ்நாட்டிற்கு இலங்கை மிகவும் அண்மை கொண்டது. இலங்கையில் பெரும்பாலும் தமிழ் மொழி பயிலப்படுகின்றது. இலங்கையில் ஒரு பகுதியாகிய யாழ்ப்பாண சேகரம் பண்டைப் பழய நாள் தொட்டுத் தனித் தமிழ் நாடாகவே இருந்து வருகின்றது. தமிழ் நாட்டுப்பிரிவில் அது ஈழமண்டலம் என்னும் பெயரால் வழங்கப் பெறுகிறது. வேதாரண்யம் என்னும் மறைக்காட்டினின்றும் யாழ்ப்பாணம் மிக அணித்தாக இருக்கிறதாம். இடையில் கடல்கிடப்பதாலும் போக்குவரவு சாதனங்களின்மையாலும் அவ்வழி இக்காள் பயன்பட்டிலது போலும்! எனவே, இலங்கை தமிழ் நாட்டிற்கு நெருங்கிய தொடர்பு கொண்டது என்று கூற வேண்டுவதில்லை. நிற்க,

இலங்கை புகழ் பெற்ற சரித்திரங் கொண்டது. இலங்கைப் பெயரை அநேகமாக இந்துக்கள் அறிந்தேயிருப்பர். ஏன்? இராமன் காதையறியா இந்து இருப்பது அருமையல்லவா? இராமன் காதையறிந்தவர் இலங்கையை அறியாதிருப்பது எங்ஙனம்? இராமகாதையிலுள்ள வேறு சிலவற்றை அறியாதிருக்க முடியும்; இராமாயணத்தின் முக்கிய நிகழ்ச்சி நடந்த இலங்கையை அறியாதிருக்க முடியுமா? இலங்கை என்னும் பெயர் கேட்டவுடன் இராமாயணமும் அவ் இலங்கை மூதூர் மன்னவனாகிய இராவணனுமன்றோ நினைவுக்கு வருகின்றனர்! தமிழ்ச்சுவையறிந்தோர் உள்ளத்தில் இலங்கை நினைவு தோன்றியவுடன் கம்பர் தோன்றுவதைக் காணலாம். கல்வி மணம் பெறுத் தமிழ்ப் பெண் மக்கள் கூடத் தாலாட்டும் பொழுது "தென்னிலங்கை ராவணனை" என்று கூறக் கேட்கின்றோம். இலங்கை சீதளம் நிறைந்த ஒரு செவ்விய தீவு. அதன் எழிலை அலங்கரிக்கும் வேலையில் ஈண்டுப்புகவில்லை.

இலங்கையில் காந்தியடிகள் இரண்டு கிழமை தங்கியருளினர்கள். தாம் கடமையாக்கொண்ட கதர் நிதிக்குப் பொருள்திரட்டும் வேலையைச் செய்தார்கள். அடிகளோடு நமது அன்பர்களான ராஜகோபாலாச்சாரியார், நாராயணன், பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியார், மு. காசிவிஸ்வநாதச் செட்டியார் முதலியோர் தமிழ்நாட்டினின்றும் போந்திருந்து கதர்ப்பணியாற்றினர். உடன்சென்று கணக்கிட்ட அன்பர் நாராயணன் அவர்களால் ஆறும் பக்கத்தில் வெளியிடப் பெற்றிருக்கும் கணக்குப்படி, ஒரு இலட்சத்து ஐயாயிரத்துச் சில்லறை ரூபாய்கள் இலங்கையில் சேர்ந்திருக்கின்றன. தமிழ் நாட்டை நோக்க இலங்கை ஈந்தது பெரும்பொருள் என்பதில் ஐயமில்லை.

இலங்கையில் சேர்ந்த இப்பொருள் தமிழ்நாட்டின் கதர் வேலைக்காகவே கொணரப்படுகிறது. இம்முறை அடிகள் எழுந்தருளியதால் கதரின் பொருட்டுத் தமிழ்நாட்டுக்குக் கிடைத்த பொருள் ஏறக்குறைய இரண்டே முக்கால் இலட்ச ரூபாய் ஆகும். இலங்கைக்குத் தமிழ்நாடு இதன் பொருட்டுக் கடமைப்பட்டிருக்கிறது. இலங்கையில் தமிழர் மட்டும் பொருள் தந்தாரில்லர், சிங்களரும் பிறரும் கொடுத்திருக்கின்றனர். இலங்கை வாணர் அடிகளிடத்துப் பேரன்புகாட்டிப் பொருளுதவிப் போற்றிப்புகழ்ந்த பெருஞ்செயல் பாராட்டத்தக்கது. பொதுவாகக் கதர்நிதிக்குப் பொருளுதவியதற்காகவும் சிறப்பாகத் தமிழ் நாட்டிற்கு அது பயன்பட்டமைக்காகவும் கதருக்குப் பொருளுதவிய இலங்கை அன்பர்க்கெல்லாம் எமது நன்றி உரியதாக!

# இடி முழக்கம்.

### ஏற்றதலைவர்.

காங்கிரஸ் வாரத்தில், அகில இந்தியப் பத்திராசிரியர் (ஜர்னலிஸ்டுகள்) மகாநாடொன்று சென்னையில் நடக்க ஏற்பாடாகியிருக்கிறதென்று தெரிகிறது. அதற்குத் தலைமை வகிக்க, திரு. ராமானந்த சட்டர்ஜீ அவர்கள் இசைந்திருப்பதாக, அறிகிறோம். திரு. ராமானந்த சட்டர்ஜீயவர்கள், "மாடர்ன் ரிவ்யூ" என்னும் சிறந்த மாசிகைக்கு ஆசிரியராவர். ஜெனிவாவில் நடந்த சர்வதேசப் பத்திராசிரியர் மகாநாட்டுக்கு அழைப்புப் பெற்றுச் சென்று வந்தவர். பத்திராசிரியத் தொழிலில் உயர்ந்த மதிப்பைப் பெற்ற திரு. ராமானந்தசட்டர்ஜீ, பத்திராசிரியர் மகாநாட்டுக்கு ஏற்ற தலைவரேயாவர். எனவே, அவர் தேர்ந்தெடுக்கப்பட்டது மகிழ்ச்சி யளிக்கத்தக்கதோர் விஷயமாகும்.

### பொய்யர் யார்?

இந்தியாவைப்பற்றி இழிவு கொண்ட புத்தகமொன்றை எழுதிய கன்னி மேயோவுக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் உதவவில்லையென்று, திரு. பர்க்கன்ஹெட் பிரபு கூறினர். ஆனால் நவம்பர்மீ உகஉ லண்டனில் இந்தியப் பொதுநலச் சங்கத்தில் (காமன் வெல்த் அவ் இந்தியா லீக்) நடந்தபெருத்த கூட்டமொன்றில், பார்லிமெண்ட் அங்கத்தினரான மிஸ் வில்கின்சன் என்னும் பெண்மணி, கன்னி மேயோவுக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் உதவிபுரிந்தனர் என்பதை மறுபடியும் கூறியிருக்கிறார். இந்தக் கூட்டம் கன்னி மேயோவின் புத்தகத்தைக் கண்டிப்பதற்காகவே கூடியதாகும். இந்த நிலையில் பர்க்கன்ஹெட் பிரபுவின் கூற்றுப் பொய்யா, அல்லது கன்னி வில்கின்ஸன் கூறியுள்ளது பொய்யா?

### கவி அலங்காரம்.

கல்கத்தாவில், ஸெயின்ட் ஆண்டிரூஸ் தினக் கொண்டாட்ட விருந்திற்குத் தலைமைவகித்த திரு. ஜே. எ. டாஸ்ஸி என்பவர்பேசியிருக்கும் ஒருபேச்சில், அறியாமையும், அகங்கார மூம்நிறைந்திருக்கின்றன. முப்பது கோடிக்குமேலுள்ள இந்திய மகா ஜனங்களுக்கு, அரசியல் சீர்திருத்தத் திட்டங்களும், ஓட்டுக்களும், ஜனநாயகமும் யாவையென்த்தெரியாதென்றும், கட்புலனாகா ஓர்சக்தி, சர்க்கார், தங்களையாள்கிறதென்று அவர்கள்நினைத்திருப்பதாகவும் அவர் விளம்புகிறார். ஸர்க்காரிடம் மகா ஜனங்களுக்கு நம்பிக்கை யிருப்பதாகவும் புகல்கிறார். ஜனங்களிடம் நெருங்கிப்பழக எண்ணமும் சந்தர்ப்பமும் பெற்றிராதவராகக் காணப்படும் திரு. டாஸ்ஸிக்கு, ஜனங்களின் அரசியல் அதிருப்தி எங்ஙனம் புலப்படும்? ஒரு நூறு பெயர்தாம் இந்தியா முழுமையிலுமே, அரசியல் வாதிகளிருப்பர்களாம்! அவர்களையும் சீர்திருத்தக் கமிஷனில் சேர்த்து, அந்தக் கமிஷனை நியாயஸ்தலத்தில் கைதிக்கூண்டில் போட்டு, விசாரித்து, தண்டிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார், திரு. டாஸ்ஸி. அவரது கவி அலங்காரப் பேச்சு, கமிஷனில் பிரிட்டிஷ் அங்கத்தினரையும் 'கைதிகள்' வருக்கத்தில்சேர்த்துவிட்டது! அவரது பேச்சு, அறியாமை கொண்ட, விளக்கமற்ற பிதற்றல் என்பதை இது விளக்கவில்லையா?

### அவமானம் நமக்கு—

இந்து-முஸ்லீம் பிணக்கு, பிராமண-பிராமணரல்லாதார் வேற்றுமை ஆகியவற்றால், பற்பல வழிகளில் நாம் சீரழிந்து வருகிறோம். உதாரணங்களான நிகழ்ச்சிகள் பல வெளிப்படையான உருவம் கொள்ளுகின்றன. வெளிப் புலப்படாமல், எலும்புருக்கி நோய்போல, நமது உள்வலியைக் குறைத்துவரும் சக்தியையும் கொண்டிருக்கின்றன அவ் வேற்றுமைகள். ஷோலாப்பூர் ஜில்லாபோர்டு சம்பந்தமாக, சமீபத்தில் ஏற்பட்டுள்ள ஒரு நிலைமை, இத்தகைய வேற்றுமைகளின் சீர் மிக்கும் தன்மையைக் காட்டுவதாயிருக்கிறது. பிராமண-பிராமணரல்லாதார் வேற்றுமையின் விளைவாக, ஷோலாப்பூர் நிர்வாகம் செயல்திறனற்றுப்போய் விட்டதாம். போர்டின் நிகழ்ச்சி எதிலும் கட்சி உணர்ச்சியே முன்னின்றதாம். இதனால், பம்பாய் அரசாங்கத்தார், போர்டைக் கலைத்துவிட்டு, போர்டின் அதிகார, அலுவல்கள் யாவற்றையும் ஜில்லாக்கலெக்டரிடம் ஒப்புவித்து விட்டார்களாம். சர்க்கார் புதிய தேர்தல்நடத்தியிருக்கலாம் என்றாலும், அது தன் விசேஷ அதிகாரத்தைப் பிரயோகித்து விட்டது. சர்க்கார் செயலைப்பற்றி, நாம் என்ன கூறித்தான் என்ன? நமது வேற்றுமைகளினால் நமக்கு, விளையும் பயன் யாது? அவமானம் நமக்கு; இலாபமோ—?

### மயில்வாகனத்தின்மேல்.

முருகக் கடவுளின் வாகனம் மயில் என்பது நண்பர்களுக்குத் தெரிந்திருக்கும். ஆனால், முருகக் கடவுள் தமது மயில் வாகனத்தின் மீது அவநம்பிக்கைக் கொண்டவண்ணமே அமர்ந்திருப்பதாக வழங்கும் கர்ண பரம்பரைக் கதை யாவருக்கும் தெரிந்திருக்குமோ, என்னவோ! ராயல்கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்பது நாடுமுழுவதும் கொண்டுள்ள அபிப்பிராயமாகும். நோக்கம்தான் வெவ்வேறு. இச் சமயத்தில் பொறுப்புள்ள எக்கட்சியும், தங்கள் தீர்மானமான முடிவை வெளியிட்டுக்கூற வேண்டியது மிக மிக அவசியமாகும். பற்பல கட்சியினரின் முடிவுகளும், நாட்டின் பொதுவான செயற் கூட்டுக்கு ஒரு முடிந்த உருவளிக்கவேண்டிய இத் தருணத்தில், சென்னை மந்திரிக் கட்சியினர் ஒரு முடிவுக்கு வாராதது வருந்தத்தக்கதாகும். நவம்பர்மீ உகூ சென்னை மந்திரிக் கட்சியினர் ஒரு கூட்டம் கூடினர். மூன்று மந்திரிகளும் உட்படப் பலர் விஜயம் செய்திருந்தனர். நாட்டின் அதிருப்தியைத் தாங்கள் அறிந்திருப்பினும், மேலே நடப்பதைக் கவனித்தே, ராயல் கமிஷன் பற்றித் தாங்கள் முடிவுசெய்ய வேண்டுமென அவர்கள் தீர்மானம் செய்திருக்கிறார்கள். இவ்வாறு "மயில் வாகனத்தின்மேல்" இருப்பதைவிட, கூடிய சீக்கிரத்தில் ஒரு முடிவுக்கு வருதல்தான் முறையாகும். மந்திரிக் கட்சியார் மறுபடியும் கூடியேனும் அவ்வாறு செய்வார்களா?



### உண்மையாயின்—?

இந்தியாவுக்குத் தன்னைத்தானே ஆண்டுகொள்ளச் சக்தி உண்டாகவில்லையென்றும், அதற்காக அதற்குத் தாங்கள் தர்மகர்த்தர்களாக அமர்ந்திருப்பதாயும், அச்சக்தி அதற்கு உண்டாய்விட்டால் அதன் ஆட்சியை அதற்கு அளித்து விடுவதாயும், பிரிட்டிஷ் ராஜதந்திர நிபுணர்கள் அடிக்கடி கூறுவது வழக்கம். இப்பொழுது இந்தியா மந்திரியாகவுள்ள, பர்க்கன்ஹெட் பிரபுவும் இதற்கு விலக்கானவரல்ல. ஆனால், அவர்களது உள்ளக்கருத்து, எத்தனைகாலம் அதைப் பிரிட்டிஷ் ஆதிக்கத்துள் வைத்து அதன் "இரத்தத்தை"ப் பலவகையிலும் உறிஞ்சிவரமுடியுமோ அவ்வளவுகாலமும்உறிஞ்சிவர வேண்டுமென்பதுதான் என்பதற்குச் சான்றுகள் அவ்வப்பொழுது தோன்றுவதுண்டு. இந்திய 'ஸிவில் ஸர்வீஸ்' படிப்புக்கு இந்தியரைத் தேர்ந்தெடுப்பதற்காக அலஹாபாத்தில் நடைபெறும் போட்டிப் பரீட்சைகளில், சென்ற பரீட்சையில் கசு பேர் தேறிவிட்டதைக்கண்டு, பர்க்கன்ஹெட் பிரபுவுக்குக் கலக்க மேற்பட்டுவிட்டதாம். இவ் அலகபாத் பரீட்சையை எடுத்துவிடலாமா என்பதைக் குறித்தும், சீர்திருத்தக் கமிஷன் யோசிக்கவேண்டும் என்று பர்க்கன்ஹெட் ஒரு குறிப்பில் யோசனை கூறியிருக்கிறாராம். "பர்வர்டு" பத்திரிகைக்கு அதன் அரசியல் நிருபர்லண்டனிலிருந்து தந்திச் செய்தியொன்றில் இவ்வாறுகூறியிருக்கிறார். இதுஉண்மையாயின், பிரிட்டிஷ் அரசியல் தந்திரிகளின் கண்ணோக்கத்திற்கு எத்தகைய சான்றாகும் இது?

### 'ஜனமித்திரன்' வழக்கு.

புதுக்கோட்டையில் வெளியாகும் "ஜனமித்திரன்" மீது வந்த ராஜத்துரோக வழக்கில், ஸெஷன்ஸ் கோர்ட்டார் 'ஜனமித்திரன்' ஆசிரியர் திரு. சுப்பிரமணிய அய்யருக்கு விதித்த ஒரு ஆண்டுக் கடுங்காவலையும் ரூ 1௦௦ அபராதத்தையும் அப்பீல் கோர்ட்டாரான சீப்கோர்ட்டாரும் ஊர்ஜிதஞ் செய்துவிட்டார்கள். குற்றம் யாதெனில், திரு. சத்ய மூர்த்தி செய்த ஒரு பிரசங்கத்தையும், 'இந்து' பத்திரிகை எழுதிய ஒரு குறிப்புரையையும் பிரசுரித்து, சமஸ்தான வாரசு பாத்தியத்தைக் குறித்து புதுக்கோட்டை ஜனங்களின் மகாநாட்டில்நிறைவேறியதோர் தீர்மானத்தை ஆதரித்து ஒரு குறிப்பு எழுதியதுமாகும். அஸெஸர்கள் யாவரும் குற்றவாளியல்லவென்று தீர்த்த ஒருவருக்கு விதிக்கப் பெற்ற இத்தண்டனை, சமஸ்தானத்தின் நீதிக்கு நற்சான்று பகர்வதன்று. "ஜனங்களுக்கு இருக்கும் குறைகளையும், அரசாங்கத்தாரோ அல்லது உத்தியோகஸ்தர்களோ செய்யக் கூடிய தவறுகளையும் எடுத்துரைப்பதில் ஒருவருடைய விருப்பு வெறுப்பையும் கவனியாது நடுநிலைமையாயும் நிர்ப்பயமாகவும் எடுத்துரைக்கவேண்டியதவசியம்" என்று, பின் வந்துள்ள ஆசிரியருக்குச் செய்திவிடுத்துள்ள திரு. பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் போன்றோர், நல்லெண்ணத்துடனும், கண்ணியமாகவும் எழுதும் குறிப்புரை போன்றவையன்று, பிரஸ்தாபத் தீர்ப்புப் போன்றவையே சமஸ்தான நிர்வாகத்துக்கு இழுக்களிப்பனவாகும். தமது உள்ளத்தைத் திறத்துடன் வெளியிட்டு, அதற்காகச் சிறை செலும் பாக்கியம் பெற்ற ஆசிரியரைப் போற்றுகிறோம்.

### படைகுறைப்புப் பகட்டு.

ஜெனிவாவில் நடந்த படைகுறைப்புக்கு முன்னேற்பாடான மகாநாட்டின் முக்கிய கூட்டங்களால் விளைந்த பயன் யாதென்றுதெரியவில்லை. வல்லரசுகளுக்குள், இன்னும் படைமைக் கனல் கனிந்துகொண்டேயிருப்பதாகத்தான், ஐரோப்பிய நாடுகளிலிருந்து ஆங்கிலத் தினசரிகளுக்கு வரும் நிருபங்களினின்றும் புலப்படுகின்றன. நாடுகளைப் பங்கிட்டுக்கொள்ளும் இச்சையும்,ஏகாதிபத்தியப் பேராசையும் அவற்றைவிட்டுத் தொலைந்தாலன்றி, படைகுறைப்பு ஏற்பட்டு, உலக சமாதானம் தோன்றுவது எப்படி என்பது யாருக்கும் விளங்காது. நவம்பர்மீ ௩0௨, ௨௬ நாடுகளின் பிரதிநிதிகளைக்கொண்டதொரு கூட்டம் ஜெனிவாவில் நடைபெற்றதாம். இதுவரையில் இம் மகாநாட்டில் உறுப்பினராகச் சேர்ந்திராத அமெரிக்காவும், ருஷியாவுங்கூட இதில் சேர்ந்துள்ளனவாம். இது ஒரு விசேஷந்தான். படைகுறைப்பு முன்னேற்பாடான வேலைகள் முடிந்ததும் படைகுறைப்பு மகாநாடு கூட்டப்பெறுமாம். ஆனால், பிரிட்டிஷ் மந்திரிகளின் பேச்சுக்கள் படைகுறைப்பு எண்ணம் அவர்களுக்குஇல்லையென்பதைக்காட்டுகின்றன. மகா யுத்தத்திற்குப் பின்னேயே தங்கள் படைகளெல்லாம் குறைத்துவிட்டதாக, ஸர் வில்லியம் ஜான்சன் கூறியுள்ளார். பிரிட்டிஷ் பிரதிநிதியாக ஜெனிவா சென்றுள்ள குஷெண்டன் பிரபுவும் இவ்வாறே கூறியுள்ளார். எனவே, பிறர் படைகுறைக்க வேண்டுமென்றே அவர்கள் விரும்புகிறார்கள். இத்தகைய மனப்பான்மையினின்றும் எப்படிப் படை குறைப்பு எழும்?

### இலங்கை அரசியல்.

இலங்கை அரசியல் சீர்திருத்தக் கமிஷன் ஒன்று நியமிக்கப்பெற்று, இதுகாலை அதுஇலங்கையில் விசாரணை புரிந்துவருகின்றது. முக்கியமான சபைகள் அநேகம் சாட்சியம் கொடுத்துவிட்டன. விசாரணையின் பெரும் பகுதியும் ஏறக்குறைய ஆகிவிட்டதென்றே சொல்லலாம். சாட்சியங்களில் சிலவினோத அம்சங்கள் அடங்கியிருக்கின்றன. ஐரோப்பியர் சார்பான பிரதிநிதிக் கூட்டத்தினர் ஐரோப்பியரிடம் பகைமை கொண்டஉணர்ச்சி, இலங்கைக் காங்கிரஸாரிடம் இருப்பதாக, விசாரணையில் கூறினார்கள். அது பிழை என்பதை, பொறுப்புள்ள வேறு சிலர் தங்கள் சாட்சியத்தில் கூறியிருக்கிறார்கள். திரு. பாய்ல் என்ற ஐரோப்பியர் "நாங்கள் காரியக்காரர்கள். எதற்கும் எங்களுக்கு நேரமில்லை. நாங்கள் பணம் ஈட்டிக் கொண்டிருக்கிறோம். நாட்டின் பாஷை எங்களுக்குத் தெரியாது" என்றாராம். மேலும், ஏழைக் கிராமவாசிகள் தங்கள் நிலங்களை விற்று, பின்கூலி ஜீவனம் செய்யுமாறு செய்விக்கும் சந்தர்ப்பங்களின் மூலம் அவர்களது நிலங்களைக் கைப்பற்றிக்கொண்டு, அவர்கள் சுகமற்ற வாழ்வு வாழச் செய்வதில் ஐரோப்பியர் பெரும் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்நிலையில், ஐரோப்பியர், மகாஜனங்களிடம்பழகிச் சகோதரத்துவம் கொண்டால், அவ்வுணர்வு-பகைமையுணர்வுஏதமிருக்குமானால்அ-அதானே யொழிந்துவிடும். அங்ஙனமின்றி, அரசியல் சீர்திருத்தத்திற்கு முட்டுக்கட்டையாக நின்றால் பலன் உண்டாமா? கமிஷனின் அமைப்பையும் ஐரோப்பியர் சாட்சியத்தையும் பிறசில சந்தர்ப்பங்களையும் நோக்கும்பொழுது, கமிஷன் வியர்த்தமான கமிஷனாகவே போமென்று புலப்படுகிறது.

# தந்தி.

(ஊழியனுக்காக வந்த தந்தி)

பினுங்கு பிரபவ கார்த்திகை உ0உ

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்றைம்பத்துமூன்று |
| ஈயம் | நூற்றுமுப்பத்திநான்கு |
| ரப்பர் | தொண்ணூற்றொன்று |

(சென்ற வாரம் வந்தது.)

பினுங்கு பிரபவ கார்த்திகை கஅஉ

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்றைம்பத்துநான்கு |
| ஈயம் | நூற்றுமுப்பத்தைந்து |
| ரப்பர் | தொண்ணூற்ருறு |

# கப்பல்.

"டைரீயா" கப்பல் இம்மதி உஉஉ புதன்கிழமை சென்னைத் துறைமுகத்துக்கு வரும். உசஉ வெள்ளிக்கிழமை பினங்குக்குப் புறப்படும்.

"எதியோபியா" கப்பல் இன்று சென்னைத் துறைமுகத்திலிருக்கிறது. இம்மதி உசஉ வெள்ளிக்கிழமை இரங்கூனுக்குப் புறப்படும்.

"எலிபண்டா" கப்பல் இம்மதி உஎஉ திங்கட்கிழமை சென்னைத் துறைமுகத்துக்கு வரும். மார்கழிமீ முதல்தேதி வெள்ளிக்கிழமையன்று இரங்கூனுக்குப் புறப்படும்.

### புதியமாதிரி போர்டுகார்கள்.

புதியமாதிரிபோர்டுகார்கள் அடுத்தஆண்டு மார்ச்சுமாதவாக்கில்தான் இந்தியாவில் விற்பனைக்குவரும். புதியகாரின் 'பிரேக்' ச0 குதிரைச்சக்தி கொண்டதாயிருக்கும். நான்கு ஸிலிண்டர் எஞ்ஜினைப் பெற்றிருக்கும். கியரில் உயர்ந்த வேகம் மணிக்கு கூ0 மைல்; இண்டர் மீடியட் (நடுத்தர) வேகம் மணிக்கு ச0 மைல். ஒரு காலன் பெட்ரோலுக்கு உ0 மைல் செல்லும். நான்கு சக்கரங்களுக்கும் 'பிரேக்,' 'திரீ ஸ்பீடு கியர்' ஆகிய வற்றைப் பெற்றிருக்கும். ரூரிங், ரோட்ஸ்டர், ஸெடான் முதலிய பல மாதிரிகள் உண்டு. இந்தியாவில் இவை விற்கப்படவேண்டிய விலைகள் நிர்ணயம் செய்யப்படவில்லை என்று தெரிகிறது.

# தேவகோட்டைத் தாலூகா போர்டு.

தேவகோட்டைத் தாலூகாப்போர்டின் கூட்டம்நவம்பர் உகஉ பகல் ௩ மணிக்கு, தேவகோட்டையில் கூடியது. தலைவர் ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரச்செட்டியார் தலைமை வகித்தார். பதினெட்டுபேர் வந்திருந்தனர். சட்டப் பிரகாரம் எழு நாட்களுக்கு முன்பே விஷய அட்டவணையும் நோட்டீசும் அனுப்பப்படாததால் கூட்டம் செல்லுபடியாகாதென திரு. எம். ஜி. முருகர்தாஜா சட்டரீதியான ஒரு ஆட்சேபனையை எழுப்பினர். இத்தவறு தவறு என்றும் நடந்துவந்திருப்பதாகவும் வழக்கப்படியே இப்பொழுதும் நடக்கலாமென்றும் அரசாங்கத்தாரின் முடிவுப்படி இதில் நடந்து கொள்ளலாமெனவும் கூட்டத்தை நடத்தலாமா கூடாதா என ஓட் மூலம் தெரிந்து கொள்ளலாமென்றும் திரு. கரு. முத்து. வெங்கடாசலம் செட்டியார் செப்பினர். திருவாளர்களான என். எஸ். வெங்கட்டாமய்யர், எம். ஆர். சேஷப்பர் முதலியோர் கூட்டத்தை நடத்த வேண்டுமென்று கூறினர். ராவ்சாகிப் எம். ஆர். சுப்பையா செட்டியார் செல்லுபடியாகாதென்பதற்குரிய பிரிவை விளக்கிக்காட்டும்படி சொன்னார். திரு. முருகர்தாஜா கஅஉ0-ம் வருடத்து லோகல் போர்டு ஆக்ட் உ-வது ஷெடியூல் ௩-வது விதியை வாசித்துக் காட்டி, சட்ட விரோதமான செய்கைக்குத் தாம் உடந்தையாகவிருக்க முடியாதெனவும் அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட சட்டத்தின் அதிகாரத்தைத் தாலூகாப்போர்டின் மெஜாரிட்டியால் அடித்துவிட முடியாதெனவும் கூறி, இக்கூட்டம் சட்டப்படி கூட்டப்படாததால் ஒத்தி வைக்க வேண்டுமென ஒரு தீர்மானம் கொண்டுவந்தனர். அதை திரு எ. மு. முத்தப்பசெட்டியார் ஆதரித்து, சட்ட விரோதமாக நடந்து கொள்ளும் தலைவரைத்தாங்கி கரு. முத்து. வெங்கடாசலம் செட்டியார் சொல்லும் வார்த்தைகள் ஆச்சரியப்படக் கூடியதாக இருக்கிறது என்று சொன்னார். கடைசியில் ஏகோபித்துக் கூட்டம் வேறுதேதிக்கு ஒத்திவைப்பதென்று முடிவு செய்யப்பட்டது. தலைவரால் கூட்டப்பட்ட இக் கூட்டம் ஒன்றுமின்றிக் கலைக்கப்பட்டது.

இரண்டாவது ஷெடியூல் மூன்றுவது விதி பின்வருமாறு:—

"அவசரமான விஷயங்களிலன்றி மற்றப்படி, சபை கூடப்போகும் தினத்தையும் காலத்தையும் அதில் நடத்தப்போகும் வேலையையும் எழுதிய நோட்டீஸ் சபை கூடுவதற்காக நிஷ்கரிஷை செய்யப்பட்ட தினத்துக்கு யூனியன் போர்டுகளின் விஷயத்தில் ஸ்பஷ்டமாய் குறைந்தது மூன்று தினங்களுக்கு முன்னதாகவும் டிஸ்ட்ரிக்ட் போர்டுகள் தாலூகா போர்டுகள் ஆகிய இவைகளின் விஷயத்தில் ஸ்பஷ்டமாய் குறைந்தது ஏழு தினங்களுக்கு முன்னதாகவும் [illegible] யொழிய சபை ஏதையும் கூட்டக்கூடாது."

இரண்டாவது முறையும் தாலூகாப் போர்டுக்குத் தலைவராகவந்த ராவ்பகதூர் சிதம்பரச்செட்டியாருக்குக் கூட்டம் கூட்ட வேண்டிய சட்ட ஒழுங்கு கூடத்தெரியவில்லையென்பது விந்தையென்று கூறுவீர்களோ? அவர் என் செய்வார்! பாவம்! அவரைத் தேர்ந்தெடுத்தது விந்தையினும் விந்தை!! சட்டமிருக்கட்டும்; மெஜாரிட்டி பலத்தினால் அடித்துவிடுவோம் எனச் சில வீரர்கள் கருதியது அதினும்விந்தை!!! என ஒரு நிருபர் உரைக்கிறார்.

## உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0—சு—0 |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | க—ச—0 |
| பவுன் (பொற்காசு) | கூ—எ—சு |
| வெள்ளி ரூபாயிடை | 0—௧௦—0 |

தட்ப வெப்ப நிலை:—

உயர்ந்த அளவு-அச

குறைந்த அளவு-எகூ.0

சுகாதாரச் சங்கம்:—இச்சங்கத்தின் வருடாந்தரக் கூட்டம் ஒன்று நாளது திங்கள் உக-ம் நாள் (சு—கஉ—உஏ) செவ்வாயன்று மாலை சு மணி முதல் இவ்வூர் இந்து மதாபிமான சங்கக் கட்டிடத்தில்கூடும். அதுகாலை புதுவருடத் தலைவர் முதலிய தேர்தல்கள் நடைபெறும். அன்பர்கள் வரவை எதிர்பார்க்கிறேன் என காரியதரிசி, ஆ. வி. லெ. அருணாசலச் செட்டியார் அறிவிக்கிறார்.

இந்துமதாபிமான சங்கம்:— நாளது கார்த்திகை மீ ககூ-உ இவ்வூர் ஹிந்து மதாபிமான சங்கத்தின் சார்பில் சமீபத்தில் ஸர் டி. சதாசிவய்யர் விண்ணுலகெய்தியதைக்குறித்து அனுதாபக்கூட்டம் ஒன்று கூடியது. காந்திகர். திரு. பிச்சப்பாசுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். திருவாளர்களான சொ. முருகப்ப செட்டியார், ஆ. வி. லெ. அருணாஜலம் செட்டியார், ப. ஜெயராமய்யர் ஆகியவர்கள் சதாசிவய்யரின் சீலம் தொண்டு ஆகியவைகளைக் குறித்தும் பிரிவாற்றாமை குறித்தும் சொற்பொழிவு செய்தார்கள். அனுதாபத் தீர்மானம் செய்யப்பெற்று, அவரது குடும்பத்தாருக்கும் அனுப்பப்பட்டதென்று காரியதரிசி அறிவிக்கிறார்.

நலஉரிமைத் தொண்டர் சங்கம்:— நிகழும் பிரபவஸு கார்த்திகைமீ கOஉ சனிக்கிழமை மாலை ௬-மணிக்கு ஷை சங்க ஆதாவில் சங்க ஹாலில் பெரிய உபந்யாசக் கூட்டமொன்று நடைபெற்றது. இக்கூட்டத்திற்கு சங்கத் தலைவர், உபதலைவர் காரியதரிசி உதவி காரியதரிசி நிர்வாக அங்கத்தினர்கள் மற்றும் அங்கத்தினர்கள் அபிமானிகள் குமான் பத்திராதிபர் ஸ்ரீமான் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் அருணகிரி காரியாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் ச. தா. பாலையாபிள்ளை அவர்கள் திருவாளர் அரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் முதலிய பலர் விஜயம் செய்திருந்தனர். சுமார் கூOO பேர் அங்கிருந்தார்கள். ஸ்ரீமான் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் அவைத் தலைமை வகித்து, சங்கத்தின் அவசியமென்ன என்பதைப்பற்றி முன்னுரை பகர்ந்த பின்னர் ஸ்ரீமான் பாலையாபிள்ளையைப் பேசும்படி கேட்டுக்கொண்டனர். பிள்ளையவர்கள் நிர்மாணத் திட்டம் என்பதுபற்றி எடுத்துக்கொண்டு கதர், மதுவிலக்கு, தீண்டாமை ஆகியவைகளைப் பற்றி வெகு இனிமையாகப் பேசினர். பின்னர் ஸ்ரீமான் சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் நமது முன்னேற்றம் என்னும் விஷயத்தைப்பற்றி எடுத்துப் பேசும்போது பால்ய விவாகத்தைக் கண்டித்தும் பல நலன்களையும் நல்ல வல்லனவாகிய கல்வியைக் கற்கவேண்டிய அவசியத்தைப்பற்றியும் மற்றும் புலால் மறுத்தலின் அவசியம், மாரியம்மன் திருவிழாக் காலங்களில் மிருகங்களைப் பலியிடுவதை நிறுத்தி மாவினங்கேற்றி வழிபடவேண்டிய அவசியம் முதலியன பற்றியும் மற்றும் முன்னேற்றம் என்பது எவ்வெவ் விஷயங்களில் அவசியமோ அவைகள் யாவற்றையும் வெகு இனிமையாகவும் அழகாகவும் கேட்போர் இருதயத்தில் பசுமரத்தாணி பதித்தாற்போல் இருக்குமாறும் பேசினார்கள். இவ்விரு அன்பர்களின் உபந்யாசம் முடிந்ததும் அவைத் தலைவரவர்கள் உபந்யாசகர்களின் கருத்தைத் தழுவி, அருமையான முடிவுரை கூறினார். இதில் மக்கள் சுயமரியாதையைப் பெறவேண்டிய அவசியத்தையும் நாளுக்குநாள் சீரடைந்து முன்னேற்றம் அடையவேண்டிய அத்யாவசியத்தையும் மக்கள் சமுதாய வாழ்க்கையிலும் அரசியல் துறையிலும் செய்யவேண்டிய வேலைகள் என்னவென்பதையும், சபையோர் அடிக்கடி கரகோஷம் செய்ய, தெள்ளிய, செந்தமிழில் இனிமையாய்ப் பேசினார்கள். பின்னர் ஸ்ரீமான் பாலையாபிள்ளையவர்களால் தலைவருக்கும், திரு. சோமசுந்தரஞ் செட்டியாருக்கும் வந்தனோபசாரம் கூறப்பட, பிள்ளையவர்களுக்கு ஜனாப் அப்துல்லா சாயபுவால் உபசாரம் கூறப்பட்டது. தலைவருக்கும் உபந்யாசகர்களுக்கும் பூச்செண்டுகள் வழங்கப்பட்டன. வந்தேமாதர கோஷத்தினிடையே, தலைவர்கள் புறப்பட்டனர் என்று மேற்படி சங்கத்தின் காரியதரிசி எழுதுகிறார்.

---

### ஆத்தங்குடி ஷை முத்துப்பட்டினம்

நாவுக்கரசு நற்சபையின் இரண்டாவதாண்டு ஏழாவது மாதக்கூட்டம் இவ்வாண்டு கார்த்திகைத்திங்கள் பதினாறும் நாள் பிற்பகலில் திரு. நடராஜ தேசிகர் கடவுள் வாழ்த்துக்கூற, திரு நடேசசாஸ்திரியாரவர்கள் தலைமையில் நடந்தது. திருவாளர்களானமாணவன்கதிபழநியப்பன், ராம. இராமசாமி சித. நாராயணன்செட்டியார், சுவீர. கதிரேசச் செட்டியார் இவர்கள் முறையே "பொறுமை, கற்பின் தகைமை, நமது கடமை, கல்வியும் கவிதை செய்புமுறையும்" என்பனபற்றி அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தியபிறகு தலைவர் முடிவுரையுடனும் வந்தனவாழ்த்துடனும் இரவு எ—உ0 மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது. என்றுகாரியதரிசி தெரிவிக்கிறார்.

---





## விளம்பரம்.

இதன்மூலம் சகலமானவர்களுக்கும் கொத்தமங்கலம் சி. ராம. அ. நா. அருணாசலம் செட்டியார் தெரிவிப்பது என்னவென்றால்:—

நான்—1. என்னுடைய இளைய சகோதரர் மைனர் அண்ணாமலை செட்டியார் 2. ஆக நாங்கள் இருவர்களும் வாதிகளாக இருந்து கொத்தமங்கலம் லேட் சி. ராம. அ. லெ. லெட்சுமணன் செட்டியார் குமாரர்களான சி. ராம. அ லெ. அருணாசலம் செட்டியார்—1 ஷையார் சகோதரர்கள் மைனர் அண்ணாமலை செட்டியார்—2. மைனர் சுப்பிரமணியஞ் செட்டியார்—3. இவர்களை 1-முதல் 3 பிரதிவாதிகளாகவும் மைனர் சி. ராம. அ. ராம. சு. அருணாசலம் செட்டியாரை 4-ம் பிரதிவாதியாகவும் சேர்த்து குடும்பத்துக்கு பாத்யமான லேவாதேவி கடைகள் உள்பட எல்லா சொத்துக்களையும் பாகபிரிவினை செய்ய 23-8-26-ல் தேவகோட்டை சப் கோர்ட்டில் வியாஜ்ஜியம் செய்து அதினால் ஷை கடைகள் உலைவினமாகியும் ஷை நிம்பர் உபயவாதிகளுக்குள் இப்பால் ராஜீநாமா ஏற்பட்டு அந்த ராஜியும் 12-10-27௳-ல் ஷை கோர்ட்டில் சாங்கிஷன் ஆகியிருப்பதில் சி. ராம. அ. நா. அருணாசலம் செட்டியாராகிய நானும் என் சகோதரன் மைனர் அண்ணாமலை செட்டியாரும் பவுண்டை சி. ராம. அ. தேக்கோன் சி. ராம. அ. ஊர்கடை சி. ராம. அ. இந்த கடைகளில் நாங்கள் விலகிக்கொண்டு அவைகளில் எங்களுக்குள்ள யாவற்று பாத்தியங்களையும் சி ராம. அ. லெ அருணாசலம் செட்டியாருக்குக் கொடுத்துவிட்டோம். ஷை ராஜீநாமா ஷரத்துப்படி அந்த கடைகளுக்கு வரவேண்டியது கொடுக்கவேண்டியதுகள் யாவற்றையும் சி. ராம. அ. லெ அருணாசலம் செட்டியாரும் அவருடைய சகோதிரர்களுமே வாங்கிக்கொடுத்துக் கொள்ளவேண்டியது. ஷை கடைகளின் விஷயமாய் இதற்கு முன்னாலோ அல்லது இதன் பிறகோ ஏற்படும் யாவற்று கடன்களுக்கும் நாங்கள் ஜவாப்தாரியல்ல. டையூ, பவுண்டை பவுண்டோதி, தேக்கோன், இந்த ஊர்களிலுள்ள சி ராம. அ. லெ. கடைகளிலும் அவுக்கான், தைக்கியிலுள்ள ராம. க. கடைகளிலும், முதல் 3 பிரதிவாதிகள் எங்கள் சம்மந்தமன்னியில் தங்கள் தனதுக்கே சொந்தமானது என்று பாத்தியம் கொண்டாடினதில் ராஜீனாமாவின் ஷரத்துப் பிரகாரம் ஷை கடைகளில் நாங்கள் கொண்டாடின யாவற்று பாத்தியங்களையும் நாங்கள் விட்டுவிட்டோம், ஷை கடைகள் விஷயமாய் வரவேண்டியது கொடுக்கவேண்டியது யாவற்று கடன்களையும் 1-முதல் 3-பிரதிவாதிகளான ஷை சி. ராம. அ லெ. அருணாசலம் செட்டியாரும் அவர் சகோதரர்களுமே வாங்கிக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டு விட்டார்கள். ஷை கடைகள் விஷயமாய் இனிமேல் எங்களின் மேல் யாதொரு சம்மந்தமும் பின் தயர்ச்சியுமில்லை

சி. ராம. அ நா.
அருணாசலம் செட்டியார்.
1—12—27

---



## கடிதங்கள்.

### வருகை.

சர்க்கார்ப்பட்டம் பெற்ற, கணக்குப்பரிசோதகர் திரு. கே. ஆர். அய்யங்கார் (ஜி. டி. எ.) அவர்கள் இரங்கூனிலிருந்து, நவம்பர்மீ கOஉ மதுரை வந்து சேர்ந்தார் என்று அறிவிக்கப்படுகிறது.

### கொப்பனாபட்டி.

இவ்வூர் விவேகாநந்த வாசகசாலை காரியதரிசியும் ஸ்ரீ மாணிக்கவாச வித்தியாசாலைக் காரியதரிசியுமான நகர வைசிய தனவந்தர்களிலொருவரான ஸ்ரீமான் பழ. அ. மெய்யப்ப செட்டியாரவாகள் இம்மதி கஉ-ம் நாள் இரங்கூனுக்குப் பிரயாணமானார்கள் என்று ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

### தேவகோட்டை.

காங்கிரஸ் சபைத்தேர்தல்—சென்றவார ஊழியனில் இவ்வூர் தேர்தல்பற்றி வெளிவந்திருக்கும் விஷயம் தவறு என்றும் உஎ—கக—உஎ-யில் வழக்கறிஞர் எஸ். சுப்பிரமணியய்யர் தலைமையில் சபை கூட்டப்பெற்று திருவாகசபை அங்கத்தவர்களும் சென்னை காங்கிரஸ் பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர் என்றும் ஒரு நிருபர் எழுதுகிறார்.

### மண்ணச்சநல்லூர்.

திறப்புவிழா:—இவ்வூரில் லால்குடி தாலூகா போர்டாரால் ஏற்படுத்தி நடந்து வருகிற எலிமெண்டரி பாடசாலைக் கட்டிடத்திறப்புவிழா தாலூகா போர்டு தலைவரால்சென்ற கஅ-கக-உஎ-ல் நடைபெற்றது. அதுகாலை திருவாளர் காரைக்குடி ஆ. வி. லெ. லெட்சுமணஞ் செட்டியாரவர்கள் 'கல்வி' என்னும் பொருள் பற்றி நீண்ட நேரம் சொற்பொழிவு செய்தார்களென ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

### ஸ்ரீ காந்தி ஆசிரமம், சிராவயல்.

காரைக்குடி திரு. அழ. ராம. அழகப்ப செட்டியார் அவர்கள் ஓர் பையனுக்காக மாதம் ரூ கO வீதம் உதவி செய்து வருகிறார்கள். அன்பர் செட்டியார் அவர்கட்கு நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

பாராட்டுகின்றேம்:—கடியாபட்டி திருவாளர் சு. பழனியப்ப செட்டியார் அவர்கள் (தற்பொழுது பாலக்காடு தீப்பெட்டி விவசாயம்) தமது பையனை நமது ஆசிரமத்திற்கு குருகுலக்கல்விக்காக அனுப்பிவைத்திருப்பது பாராட்டத்தக்கதேயாகும் என்று கும்பலிங்கம் எழுதுகிறார்.

### வேந்தன்பட்டி

திருவள்ளுவர் வாசகசாலை உபந்நியாசம்:—திருவள்ளுவர் வாசகசாலையின். எ-ம் ஆண்டு விசேடக்கூட்டம் நாளது மீ கடு-உ மாலை கூ-மணிக்கு வாசகசாலைக் காரியதரிசி திருமிகு குப. நா. குப்பான் செட்டியாரவர்கள் தலைமையில் கூடியது. தலைவர். முன்னுரை கூறியபின்னர், இராட்டினப் புலவர் முருகன் மு. சொக்கலிங்குஞ் செட்டியார் "கதர்" என்பதையும், குப. அரு. நடராஜன் செட்டியார் "வாசகசாலை" என்பதையும், நா. சோமசுந்தரஞ் செட்டியார், "நன்னெறி" என்பதையும், ந. குல்முகம்மது "அறஞ்செயவிரும்பு" என்பதையும், வெ. சி. பழ மெய்யப்ப செட்டியார் "ஊக்கமது கைவிடேல்" என்பதையும் உபந்நியசித்தார்கள். தலைவரவர்களால் தக்கவாறு முடிவுரை கூறப்பெற்றது. பின்னர், வெ. சி. பழ. மெய்யப்ப செட்டியாரால் நன்றி கூறப்பெற்று, ௯-மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

உபகாரியதரிசி:— இவ்வாசகசாலைக்கு உபகாரியதரிசியாக இருந்து வந்த அன்பர் பழ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் அயல் நாடு சென்றிருப்பதால், அவர்கட்குப் பதிலாக, அன்பர் திருவாளர் ந. பழ. நல்லகறுப்பன் செட்டியாரை நியமிக்கவேண்டுமென தலைவரவர்களால் தீர்மானம் கொண்டுவரப்பெற்று, குப. அரு. நடராஜன் செட்டியாரும், வெ. சி. பழ. மெய்யப்ப செட்டியாரும் ஆதரித்தபின்னர், தீர்மானம் நிறைவேறியது. பின்பு, உபகாரியதரிசி திருவாளர் ந. பழ. நல்லகறுப்பன் செட்டியாரால் பதவி மேற்கொண்ட விஷயமாகச் சில நல்லுரைகள் வழங்கப்பெற்றன என்று காரியதரிசி எழுதுகிறார்.

## தாய் நாடு.

சர். ஜே. வி. போஸின் ஆராய்ச்சிக் கலாசாலையின் கம்-ம் ஆண்டுவிழா சென்றவாரம், கல்கத்தாவில் நடை பெற்றது.

* * *

டிசம்பர்மீ உஉ மகாத்மா காந்தியடிகள் சிகாகோலுக்குப் போய்ச் சேர்ந்தார். டிசம்பர்மீ அஉ வரை கஞ்சம் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு, உத்களில் சுற்றுப் பிரயாணம் செய்வார்.

* * *

லாகூல் ஹரிகிருஷ்ண நாடகசாலையில் நவம்பர்மீ உகஉ நடத்துவதாக விருந்த 'ராஜ்யவீழ்ச்சி' என்னும்நாடகத்தைநடத்தக் கூடாதெனப் போலீஸார் தடுத்துவிட்டார் விட்டார்களாம்.

* * *

அலகாபாத்தில் நைட்டிங் கேல், வார்டு என்னும் இரு வெள்ளை சிபாய்கள் நகைக் கடையில் திருடியதாகக் குற்றஞ் சாட்டப் பெற்று மூன்று மாதம் காவல் விதிக்கப் பெற்றனராம்.

* * *

சர் வி. ஜே. படேல் நாடியாதில் ஒரு மாதிரி கிராமம் நிர்மாணம் செய்ய, அஸ்திவாரக்கல் நாட்டினர். அச்சமயம் ஸர் புருஷோத்தமதாஸ், தாகூர் உள்பட பல பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தனர்.

* * *

லாகூரில் நயமும், சுத்தமுமான நெய் கிடைக்கவில்லையாதலாலும், நெய்யில் சில மோசடிகள் நடைபெறுவதாலும், லாகூர் முனிசிபாலிட்டியார் நெய் வியாபாரிகள் லைசென்ஸ் இல்லாமல் விற்கக் கூடாதென் ஒரு உத்திரவிட்டிருக்கின்றனர்.

* * *

பத்திரிகையில் ஆபாசமான கட்டுரை வெளியிட்டதாக லாகூர் 'பிரதாப்' என்னும் தேசபாஷைப் பத்திராதிபர் எ எம். கிருஷ்ணனையும், பண்டித ஹிரானந்தரையும் இ. பி. கோ. ஙஙஉ வது பிரிவின்படி குற்றம் சாட்டிக் கைதி செய்திருக்கின்றனர்.

## வெளி நாடு.

ருமேனியாவின் பிரதம மந்திரியாகிய பிரேஷியானோ இறந்துவிட்டார். இதன் பயனாக ஐரோப்பாவில் ஒரு பெருத்த பரபரப்பு ஏற்பட்டிருக்கிறதாம்.

* * *

லண்டன் பார்லிமெண்டில் ராயல் கமிஷனைப்பற்றிப் பலத்த விவாதம் நடந்த பொழுது திரு. பண்டித மோதிலால்நேரு, அங்கு நடந்த நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாராம்.

* * *

லிதுவேனியத் தலை நகராகிய கோவ்னுவில் புரட்சி ஆரம்பிக்கப்பட்டதாயும், வால்டிமராவின் அரசாங்கம் கவிழ்க்கப் பட்டு விட்டதாயும், ராய்ட்டர்ச் செய்தியொன்றில் காணப்படுகிறது.

* * *

'லோடண்' என்ற இத்தாலியக் கப்பலானது துருக்கிக் கப்பல் ஒன்றுடன் மோதுண்டதால் ஒரு துருக்கியர் இறந்துபோனார். அதற்காகத் துருக்கிய நீதிபதிகள் ஷை கப்பலின் மாலுமியை, கப்பலைச் சரிவர நடத்தாத காரணம்பற்றிக் கைதுசெய்திருக்கிறார்கள்.

* * *

கோவ்னுவில் உ०, ஙo, உத்யோகஸ்தர்கள் ராஜத்வேஷிகள் எனக் கருதப்பட்டுக் கைதுசெய்யப் பெற்றிருக்கின்றார்கள்; நெருக்கடி ஏற்படக்கூடும் என்று எதிர்பார்த்த போதிலும் இதுவரை சச்சரவு ஒன்றும் நடக்கவில்லையாம்.

* * *

ஜர்மனியில் நிலக்கரியிலிருந்து மோட்டார் எண்ணெய் எடுக்க ஒரு நூதன வழி கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறதாம். உ० ராத்தல் நிலக்கரியிலிருந்து கஉ ராத்தல் எண்ணெ எடுக்கமுடியுமாம். உ கோடி பவுன் செலவிட்டால் வருடந்தோறும் ஜர்மனிக்குத் தேவையான மோட்டார் எண்ணெ உற்பத்தி செய்து கொள்ள முடியுமாம்.

## தமிழ் நாடு.

ஸர் பி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள், பங்களூரில் தமது இல்லத்தில் நவம்பர் மீ கஉ காலஞ்சென்றார்.

* * *

டாக்டர் அன்னிபெஸண்டு அம்மாள் நவம்பர் நஉ இரவு சென்னையைவிட்டு கள்ளிக்கோட்டைக்குப் புறப்பட்டுச் சென்றார். டாக்டர் சுப்பராயன் பம்பாய்க்குச் சென்றார்.

* * *

மதுரை டெபுடிதாசில்தார் திரு. டி. எஸ். ஆவுடையப்ப பிள்ளை, ராமநாதபுரம் டெபுடிகலெக்டராக வேலை பார்த்துவர, மாற்றப்பட்டிருக்கிறார். சேலம் டெபுடி தாசில்தார் திரு. ஏ. எஸ். ராமச்சந்திரம் பிள்ளை, மதுரை டெபுடி தாசில்தாராக மாற்றப்பட்டிருக்கிறார்.

* * *

புதுக்கோட்டை "ஜன்மித்திரன்" ஆசிரியர் திரு. பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் மீதுவந்த ராஜத்துரோகவழக்கில்லைதன்க் கோர்ட்டார் ஒருவருஷக் கடுங்காவலும், உ००ரூ. அபராதமும் விதித்திருந்தார்கள். அப்பீல் கோர்ட்டாரும் அதையே உறுதி செய்து விட்டார்கள்.

* * *

மதுரை சௌராஷ்டிர உயர்தரப் பாடசாலையைச் சேர்ந்த இலக்கிய சங்கத்தின் கச-வது ஆண்டுவிழா ராமநாதபுரம் கல்வி இலாகாத் தலைவர் திரு. டி. வி. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் தலைமையில் இம்மிஉசம் நாள் மதுரையில் நடந்தது. அவ்வமயம் பி. ஸ்ரீ ஆச்சாரியார் 'கல்வியின் பயனும் பொருளும்' என்னும் விடயத்தைப் பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்.

* * *

சென்னை மந்திரிக்கட்சிக் கூட்டம் நவம்பர்மீ உஎஉ காலை கக மணிக்கு, சென்னைப் பிரதம மந்திரி காரியாலயத்தில் கூடிற்று. ராயல்கமிஷன் பகிஷ்காரத்தைப்பற்றி ஜனங்களின் போக்கை யனுசரித்துப் பின்னால் முடிவுசெய்து கொள்வதென்று தீர்மானித்ததாம்.

## காங்கிரஸ்.

சென்னைக் காங்கிரஸ் பந்தல் [illegible] வேலை பெரிதும் நடைபெற்று [illegible] சென்னை [illegible] [illegible] [illegible] நிக்கார் [illegible] தம்பி, தபால் [illegible] [illegible] [illegible] நில் ஏற்படுத்த [illegible] ளர். [illegible] பினர், எழும்பூர் [illegible] நகர் அமைப்பு [illegible] அமர்த்திருக்கிறார் என்று தெரிகிறது.

---

### தேவகோட்டை டெம்பரரி சப்கோர்ட்டு 1927-ஸு இன்ஸால்வென்ஸி மனு நெம்பர் 22.

| | |
|---|---|
| ப. மு. ப. தேவராயன் செட்டியார் | மனுதார் (கடன்காரர்) |
| தேவகோட்டை எ. பெரி. எ. நா. சின்னையா செட்டியார் | எதிர் மனுதார் (கடன்[illegible]) |

ஷை எதிர் மனுதார் கடன் நிக்க சக்தியற்றவரென்று நிர்மாணிக்கக்கோரி ஷை மனுதார் 1920ஸு 5வது ஆக்ட்டு 7வது பிரிவின்படி [illegible] கோர்ட்டில் மனுச் செய்திருக்கிறார் என்பதையும் ஷை மனு 1928ஸு ஜனவரிமீ 12உ விசாரணைக்கு வருமென்பதையும் இதன் மூலம் அறிவித்திருக்கிறது.

(எம். ஆர். சங்கரய்யர்.)
பிரின்ஸிபல் சப்ஜட்ஜ்
தேவகோட்டை
28—11—1927.

---

